# இதுவே
# நமது அழைப்பு

அல் இமாம்
முஹம்மத் நாஸிருத்தீன் அல் அல்பானி

ஆங்கில வழித் தமிழாக்கம்

41 பக்கங்கள்

www.masjiduthmanbinaffan.blogspot.com

masjiduthmanbinaffan@gmail.com

+94 77 7711019



مسجد عثمان بن عفّان
Masjid Uthmaan Bin Affaan
Sri Lanka

**நூல் அறிமுகம்:**

இது இமாம் அவர்களது உரையொன்றின் நூலாக்கமாகும். இது "இதுவே நமது அழைப்பு" என்ற பெயரில் ஒளிப்பதிவு செய்யப்பட்டு விநியோகிக்கப்பட்டது. அவ் ஒளிப்பதிவின் நேரடி ஆங்கில மொழியாக்கத்திலிருந்து தமிழாக்கப்பட்டதே உங்கள் வாசிப்புக்காக இருக்கும் இந் நூல்.

இதில் இஸ்லாத்தில் இல்ம் (அறிவு) என்பதன் யதார்த்தம், அதனை சுமப்போரது யதார்த்தம் என்பதோடு அதனூடே இம் மார்க்கத்தினது சரியான (மன்ஹஜ் எனும்) அணுகுமுறை என்னவென்பதைப் பற்றியதொரு விபரமான விரிவுரையினை இமாமவர்கள் அல்லாஹ்வின் தவ்ஃபீக்கோடு வழங்கியுள்ளார்கள்.

இந் நூல் முஸ்லிம்களாகிய நாம் ஒவ்வொருவரும் கற்றுத் தெளிய வேண்டிய மிக முக்கியமான விடயங்களை உள்ளடக்கியுள்ளது.

(உஸ்தாத் இப்ராஹீம் என்பவரின்) **அறிமுகவுரை:**

அல்லாஹ்வின் பெயரால், அல்லாஹ்வுக்கே புகழ் அனைத்தும்; அல்லாஹ்வின் ஸலவாத்தும் ஸலாமும் அவனது தூதர் (ﷺ) அவர்கள் மீது நிலவட்டுமாக. அதனைத் தொடர்ந்து, நிச்சயமாக, உயர்ந்தோனான அல்லாஹ் எம்மீது ஈமானின் அருளை சொரிந்துள்ளான், மேலும் அவன் அனைத்து முஸ்லிம் உம்மத்திற்கும் அறிஞர்களின் மூலம் அருள் புரிந்துள்ளான்; அவர்களையே அறிவின் மூலமாக அல்லாஹ் கண்ணியப்படுத்தியுள்ளான். ஆகவே (உலமாக்கள் ஆகிய) அவர்களால் மக்களுக்கு அல்லாஹ்வின் பாதையின்பால், அல்லாஹ்- வின் வழிபாட்டின்பால் வழிகாட்ட முடியும். அவர்களே சந்தேகமின்றி நபிமார்களின் வாரிசுகளும் ஆவர். ஆகவே இங்கு நமது வருகைக்கான காரணம், இன்ஷா அல்லாஹ், ஆரம்பமாக அல்லாஹ்வை திருப்திபடுத்துவதற்காகவும், இரண்டாவதாக அறிவைப் பெறுவதற்குமாகும். இது அல்லாஹ்வின் திருப் பொருத்தத்தைப் பெற்றுக் கொள்வதன்பால் இட்டுச் செல்லும். ஆகவே அல்லாஹ்வின் மீது ஆணையாக, இதுவோர் மகிழ்ச்சிகரமான சந்தர்ப்பமாகும், இங்கு நம்மால்

நமது ஷேஃக், மேலும் நமது அறிஞர், நமது மகத்தான ஆசிரியர், ஷேஃக் முஹம்மத் நாஸிருத்தீன் அல் அல்பானி அவர்களோடு ஒன்றுகூட முடிகின்றது.

முதலாவதாக, இச் சமூகத்தின் சார்பாக நாம் நமது கண்ணியத்து-க்குரிய ஷேஃக் அவர்களை வரவேற்கின்றோம், மேலும் செவிமடுக்கும் அனைவர் சார்பிலும், குறிப்பாக அறிவு தேடும் மாணவர்கள் சார்பிலும், அவர்கள் அனைவருமே தமது வரவேற்பை வழங்குவதோடு, நமது கண்ணியத்திற்குரிய ஷேஃக் அவர்களோடு இன்று ஒன்றுகூட ஆவலா-யுள்ளனர். சந்தேகமின்றி நம் அனைவருக்கும் அவருடைய அறிவையும் விவேகத்தினையும் கேட்பதற்கான ஆவலுள்ளது. ஆகவே அள்ளாஹ் அவருக்கு அருளியுள்ள அறிவை நாம் கேட்போம். அதன் பிறகு நமது ஷேஃக் தனது உரையை நிறைவு செய்ததன் பின் இந்த பொது மன்றம் கேள்விகளுக்காக திறக்கப்படும். ஆனாலும் கேள்விகள் எழுத்து மூலம் வழங்கப்பட வேண்டுமென நாம் கேட்டுக் கொள்கின்-றோம். அதற்காகவுள்ள தாள்கள் பகிரப்படும், இன்ஷா அள்ளாஹ். நாம் மீண்டும் கூறுகின்றோம், இதுவோர் மகிழ்ச்சிகரமான சந்தர்ப்பம், மேலும் நாம் கூறுகின்றோம், அஹ்லன், நமது ஷேஃக் அவர்களுக்கு நல் வரவு.

உரை:

அஹ்லன் பிகும், நிச்சயமாக அனைத்துப் புகழும் அள்ளாஹ்வுக்கே, நாம் அவனைப் புகழ்கின்றோம், நாம் அவனிடம் உதவி தேடுகின்றோம், மேலும் அவனிடம் பாவமன்னிப்புக் கோருகின்றோம். நமது ஆத்மாக்-களிலுள்ள தீங்குகளிலிருந்தும், நமது செயல்களது தீங்குகளிலிருந்-தும் அள்ளாஹ்விடம் பாதுகாவல் தேடுகின்றோம். அள்ளாஹ் யாரை நேர்வழிப் படுத்தினானோ அத்தகையவரை வழிகேட்டில் செலுத்தக்-கூடிய யாரும் இல்லை, அவ்வாறே அவன் யாரை வழிகேட்டில் விட்டு-விட்டானோ அத்தகையவனை நேர்வழிப் படுத்தக் கூடிய யாரும் இல்லை. அள்ளாஹ்வையன்றி வணங்கக் கூடிய இலாஹ்[1] யாருமில்லை என நான் சாட்சியம் கூறுகின்றேன்.

அதனைத் தொடர்ந்து, நிச்சயமாக சிறந்த வார்த்தை அள்ளாஹ்வினுடைய வார்த்தையாகும் மற்றும் சிறந்த வழிகாட்டல் முஹம்மத் (ﷺ) அவர்களது வழிகாட்டலாகும், மேலும் காரியங்களில் கேடானது (மார்க்கத்தில்) புதிதாக ஏற்படுத்தப்பட்டவையாகும்; புதிதாக ஏற்படுத்தப்பட்ட ஒவ்வொரு காரியமும் நூதனமாகும், ஒவ்வொரு நூதனமும் வழிகேடாகும், ஒவ்வொரு வழிகேடும் நரகிலிருக்கும்.

சகோதரர் உஸ்தாத் இப்ராஹீம் அவர்களுக்கு அவரது வார்த்தைகளுக்காகவும் புகழ்ந்துரைப்புக்காகவும் நான் நன்றி கூறுகின்றேன். அதற்கு பதிலளிக்குமுகமாக முதல் ஃகலீஃபா அபூ பக்ர் அஸ் ஸித்தீக் (ؓ) அவர்கள் கூறிய முன்மாதிரியைப் பின்பற்றுவதனைத் தவிர எனக்கு வேறில்லை. அவரே பொருத்தமான தகைமையுடன் முதல் ஃகலீஃபாவாக ஆனார். ஆனாலும் அதற்கு மாற்றமாக, தன்னை ஒரு நல்ல விடயத்திற்காக எவராவது புகழ்வதனைக் கேட்பாராயின், அந்தப் புகழ்ச்சி யாரிடமிருந்து வந்தது என்பதனைப் பாராது அதனை மிகைப்படுத்தலாகவே நம்பினார்கள். (இவ்வாறு அவர்கள் நம்பியது) அவர்கள் அள்ளாஹ்வினுடைய தூதர் (ﷺ) அவர்களது ஃகலீஃபா (என்ற அந்தஸ்தில்) இருந்து, மேலும் அதற்கு தகைமையானவராக இருந்தபோதுமாகும். ஆயினும்... [ஷேஃக் அவர்களை அழுகை ஆட்கொள்கின்றது, பேச முடியாது சொற்ப நேரம் தவித்தார்கள்.] ஆயினும், அவர்கள்:

اللَّهُمَّ لا تُؤَاخِذْنِي بِمَا يَقُوْلُونَ، وَاجْعَلْنِي خَيْراً مِمَّا يَظُنُّونَ،

وَاغْفِرْلِي مَا لا يَعْلَمُوْنَ.

**"அள்ளாஹ்வே, அவர்கள் என்னைப் பற்றி கூறியதைப்பற்றி என்னிடம் கேள்வி கணக்கு கேட்டு விடாதே, மேலும் அவர்கள் (என்னைப் பற்றி) கருதுவதைவிட சிறப்பானவனாக என்னை ஆக்கி வைப்பாயாக,**

மேலும் அவர்கள் (என்னைப்பற்றி) அறியாதவை பற்றி என்னை மன்னிப்பாயாக"[2] எனக் கூறக் கூடியவராய் இருந்தார்கள்.

இதுவே இப் பெரும் ஸித்தீக் (ஆகிய அபூ பக்ர் அவர்கள்) கூறக் கூடியதாய் இருந்தது. அவ்வாறிருப்பின், அவருக்கு பின் வந்தவர்கள் கூறக்கூடியதென்ன? அவரது முன்மாதிரியினைக் கடைபிடித்தவனாய் நான் கூறுகின்றேன்: "அள்ளாஹ்வே, அவர்கள் என்னைப் பற்றி கூறியதைப்பற்றி என்னிடம் கேள்வி கணக்கு கேட்டு விடாதே, மேலும் அவர்கள் (என்னைப் பற்றி) கருதுவதைவிட சிறப்பானவனாக என்னை ஆக்கி வைப்பாயாக, மேலும் அவர்கள் (என்னைப்பற்றி) அறியாதவை பற்றி என்னை மன்னிப்பாயாக."

சற்று நேரத்திற்கு முன்பாக நீங்கள் கேட்ட நமது கண்ணியத்திற்குரிய சகோதரர் இப்ராஹீம் அவர்களால் வர்ணிக்கப்பட்டவர் நானல்ல என்பதனையும் இத்தோடு சேர்த்து கூறிக் கொள்கின்றேன். நானொரு அறிவு தேடக்கூடிய மாணவன் மட்டுமே, வேறொன்றுமில்லை. மேலும், "என்னிடமிருந்து (கேட்டது) ஒரு வசனமேயாயினும் அதனை எத்திவையுங்கள் மற்றும் இஸ்ராயீல் கோத்திரத்திடமிருந்தும் அறிவியுங்கள், அதில் எந்தக் குற்றமுமில்லை. மேலும் யாரொருவன் என் மீது வேண்டுமென்றே பொய்யுரைப்பானோ அவன் தனது இருப்பிடத்தை நரகில் எடுத்துக் கொள்ளட்டும்." என்ற நபி (ﷺ) அவர்களது ஹதீஸு க்குக் கட்டுப்படுவது ஒவ்வொரு மாணவனினதும் கடமையாகும்.

ஆகவே இந்த ஹதீஸின் அடிப்படையிலும் மற்றும் இந்த மகத்தான நபித்துவ வாக்கிற்கும், மேலும் அள்ளாஹ்வின் நூலினதும் மற்றும் அள்ளாஹ்வின் தூதர் (ﷺ) அவர்களது ஹதீஸு க்கும் இசைவாகவும் நாம் மக்கள் அறியாதவைகளை அவர்களுக்கு எத்திவைக்கும் பணியினை மேற்கொள்கின்றோம். ஆனாலும் நமது சில சகோதரர்கள் நம்மைப் பற்றி நல்லெண்ணம் வைக்கின்ற விதமாக நாம் (பெரும் அறிஞர்களாக) மாறிவிட்டோம் என்பது அதன் கருத்தல்ல. இதுவே நான் எனது ஆழ் மனதில் உணர்கின்ற உண்மையாகும்.

எப்போதெல்லாம் நான் இவ்விதமான பேச்சுக்களைக் கேட்கின்றேனோ, அப்போதெல்லாம் ஒரு பழமொழி என்னுடைய ஞாபகத்தில் வரும், அது அறிஞர்கள் மத்தியில் நன்கு அறியப்பட்டதாகும்:

البُغَاثُ بِأَرْضِنَا يَسْتَنْسِرُ

**"நிச்சயமாக (புகாஸ்) சிறு பறவை நமது நாட்டில் ஒரு கழுகாய் மாறியுள்ளது."**

இக் கூற்றின் மூலமாக அல்லது இப் பழமொழியின் மூலமாக கருதப்படுவது என்னவென்று சிலர் அறியாதுள்ளனர். *புகாஸ்* என்பது ஒரு மதிப்பற்ற சிறு பறவை. ஆனாலும் இச் சிறு பறவை மக்கள் மத்தியில் அவர்களுடைய அறியாமையின் காரணமாக மக்களுக்கு ஒரு கழுகாய் மாறியுள்ளது. (அதாவது கழுகைக் காணாதோர் ஒரு சிறு பறவையைக் கூட ஒரு கழுகென நம்புகின்றனர்.)

சத்தியத்தின் மீதிருந்து சரியாகவோ அல்லது அசத்தியத்தின் மீதிருந்து தவறாகவோ இஸ்லாத்தின்பால் அழைக்கக் கூடிய பெரும்பாலான மக்கள் தொடர்பாக இப் பழமொழி உண்மையாகும்.

(இன்று) "இந்த நபர்" அறிஞர் எனச் சரியாகக் கூறத்தக்கவர்கள் ஒரு சிலரைத் தவிர, மொத்த முஸ்லிம் உலகும் (அறிஞர்கள் இன்றி) காலியாக உள்ளது என்பதை அள்ளாஹ்வே அறிவான். ஆதாரபூர்வமான ஹதீஸில் அறிவிக்கப்பட்டுள்ளது, அப்துள்ளாஹ் இப்னு அம்ர் இப்னு ஆஸ் (ﷺ) அவர்களிடமிருந்து இமாம் அல் புஃகாரி தனது ஸஹீஹில் அள்ளாஹ்வின் தூதர் (ﷺ) அவர்கள் கூறியதாக அறிவிக்கிறார்கள்: **"நிச்சயமாக அள்ளாஹ் அறிவினை அறிஞர்களின் உள்ளங்களிலிருந்து அகற்றி விட மாட்டான். ஆனாலும் அவன் அறிஞர்களை (உயிர்களைக் கைப்பற்றி) எடுத்துக் கொள்வதன் மூலமாக அறிவினை அகற்றுவான். எந்தவொரு அறிஞனும் இல்லாது போகின்ற வரை இதுவே முக்கிய விடயம் எந்தவொரு அறிஞனும் இல்லாது போகின்ற வரை, (அப்போது) மக்கள் அறிவீனர்களை தலைவர்களாக எடுத்துக் கொள்வார்கள், அவர்களோ கேள்வி**

**கேட்கப்பட்டு அதற்கு அறிவின்றி ஃபத்வா வழங்குவார்கள். ஆகவே அவர்களும் வழிகெட்டு பிறரையும் வழிகேட்டில் செலுத்துவார்கள்."[3]**

அள்ளாஹ் இந்த பூமியை அறிஞர்கள் இல்லாமல் இருக்கச் செய்வதனால், அவனது அத்தாட்சியை தனது அடியார்கள் மீது நிலை நாட்டுவான் என்பது இதன் கருத்தல்ல, ஆயினும் அதன் கருத்து என்னவெனில், காலம் செல்லச் செல்ல அறிவு குறைவடைந்து செல்லும் என்பதாகும். மேலும் நாம் இவ்வாறான நிலையில் அறிவில் குறைந்து, மேலும் குறை அறிவில் அதிகரித்துச் செல்வோம், எதுவரையெனில் இந்த பூமியின் மேற்பரப்பில் அள்ளாஹ், அள்ளாஹ் என்று கூறக்கூடிய ஒருவனும் எஞ்சியிருக்க மாட்டான். நீங்கள் இந்த ஹதீஸை பல தடவைகள் கேட்டிருக்கின்றீர்கள், மேலும் இது ஆதாரபூர்வமானதொரு ஹதீஸு மாகு-ம்:

**"பூமியின் மீது அள்ளாஹ், அள்ளாஹ் என்று கூறக்கூடிய ஒருவன் இருக்கின்றவரை கடைசி நேரம் நிலை நாட்டப்படமாட்டாது."**

**"...எந்தவொரு அறிஞனும் இல்லாது போகின்ற வரை, (அப்போது) மக்கள் அறிவீனர்களை தலைவர்களாக எடுத்துக் கொள்வார்கள்..."**
இந்த ஹதீஸின் கடைசிப்பகுதியில் குறிப்பிடப்பட்டுள்ள மக்களில், அல் குர்ஆனையும் சுன்னாவையும் அறிஞர்களது விளக்கங்களுக்கு முரணாக விளக்கும் தலைவர்களும் அடங்குவர். கடந்த காலத்தில் உள்ளோர் மட்டுமே என நான் கூறவில்லை, ஆனாலும் இக் காலத்-திலும் இவ்வாறானோர் உள்ளனர்.

நிச்சயமாக அத்தகையோர் அள்ளாஹ், அள்ளாஹ் என்ற இந்த ஹதீஸை அள்ளாஹ், அள்ளாஹ், அள்ளாஹ் என ஒற்றை வார்த்தையில் ஸிக்ர் செய்வதற்கான அனுமதியாக, சரியாகக் கூறின் பரிந்துரையாகவே எடுத்துக் கொள்கின்றனர். [சூஃபிகளிலுள்ளோரைப் போலாகும்.][4]

ஆகவே இந்த ஹதீஸை இந்த தவறான விளக்கத்தோடு கேட்கின்ற யாரும் ஏமாற்றப்படாமல் இருக்க மாட்டார்; இது தற்செயலாக இருப்-

பினும், எனது சகோதரர்களுக்கு (அவர்களது) இவ் விளக்கமானது பொய்யானது என்பதை இங்கு ஞாபகப்படுத்திக் கொள்கின்றேன்.

முதலாவதாக, இந்த ஹதீஸு க்குரிய விளக்கம் அல்லாஹ்வின் தூதர் (ﷺ) அவர்களுடைய இன்னொரு ஹதீஸில் கூறப்பட்டுள்ளது. இரண்டாவதாக, (அவர்கள் கூறக் கூடிய) இவ்வாறான விளக்கங்கள் சரியாக இருந்திருப்பின், நமது (ஸலஃபுஸ் ஸாலிஹீன்கள் எனும்) நன் முன்னோர்களின் செயல்களில் அதற்கானதொரு முன்மாதிரி இருந்திருக்கும், அவர்களை அல்லாஹ் பொருந்திக் கொள்வானாக. ஆகவே அவர்கள் (அதாவது நமது ஸலஃபுஸ் ஸாலிஹீன்கள் இத்தகைய மனிதர்கள் கூறுவதுபோல்) அதனை செய்யவில்லையாயின், அவர்கள் (இவ்வாறு) அதனைச் செய்யாமல் இருந்தமை (இத்தகையவர்களது) அவ்வாறான விளக்கங்களின் பொய்மையைச் சுட்டிக் காட்டுவதாயுள்ளது.

இப்போது (இவ்) ஹதீஸினுடைய மற்றைய அறிவிப்பும் சேர்த்துக் கொள்ளப்படின், மேலும் பொதுவாகக் கூறப்படுவது போல் அதற்கான (அதாவது ஏற்கனவே கூறிய ஹதீஸு க்கான) முக்கிய விளக்கமாகவும் இது உள்ளது, இந்த ஹதீஸினை அஹ்மத் அவர்கள் தனது முஸ்னதில் ஆதாரபூர்வமான அறிவிப்பாளர் பட்டியலோடு அறிவிக்கிறார்கள், அதனுடைய வாசகமானது:

**“பூமியின் மீது லா இலாஹா இல்லல்ளாஹ், என்று கூறக்கூடிய ஒருவன் இருக்கின்றவரை கடைசி நேரம் நிலை நாட்டப்பட மாட்டாது.”**

ஆகவே இதுவே முதலாவதாக ஹதீஸில், அல்லாஹ், அல்லாஹ் என்ற வார்த்தையின் மூலம் நாடப்பட்டதாகும்.

விஷயம் என்னவெனில், இன்று துரதிஷ்டவசமாக உலகில் தமது விரிவான அறிவால் இப் பூமியை நிறப்பக் கூடிய மற்றும் அதனை மக்கள் மத்தியில் பரப்பக் கூடிய அறிஞர்கள் இல்லாதுள்ளனர். ஆகவே இன்று ஒரு வாக்கில் கூறப்படுவதுபோலான நிலைமை ஏற்பட்டுள்ளது: ‘அவர்கள் (அன்று) கணக்கிடப்பட்டபோது குறைவாக

இருந்தனர், ஆனால் இன்று அவர்கள் அந்தக் குறைவிலும் குறைவாகிவிட்டனர். '

எனவே, அவன் எம்மை உண்மையாகவே அறிஞர்களின் முன்னுதாரணங்களை எடுப்பவர்களிலும், (அறிஞர்களான) அவர்களது வழியினை நேர்மையாகவே பின்பற்றுவோரிலும் உள்ளவர்களாய் ஆக்குவானாக என நாம் அள்ளாஹ் عَزَّوَجَلَّ விடமிருந்து எதிர்பார்ப்போம். இதுவே நாம் அள்ளாஹ் عَزَّوَجَلَّ விடமிருந்து எதிர்பார்க்கின்றோம், அதாவது அவன் நம்மை தூதர் (ﷺ) அவர்கள் கூறிய விதமாக: **"யாரொருவர் அறிவினைத் தேடக் கூடிய வழியில் செல்வாரோ அத்தகையவருக்கு அள்ளாஹ் சுவனம் செல்லக் கூடிய பாதையை (இலகு) ஆக்குவான்."**[5] என்ற வழியைப் பின்பற்றக் கூடிய மாணவர்களில் எம்மையும் ஆக்குவானாக.

இது எம்மை இந்த அறிவு தொடர்பான கலந்துரையாடலின்பால் இட்டுச் செல்கின்றது. இது அல் குர்ஆனில் பற்பல இடங்களில் குறிப்பிடப்பட்டுள்ளது. அள்ளாஹ்வின் அவ்வாறான வாக்குகளிலொன்று:

قُلْ هَلْ يَسْتَوِي الَّذِينَ يَعْلَمُونَ وَالَّذِينَ لَا يَعْلَمُونَ ﴿٩﴾

**"அறிவுள்ளவர்களும் அறியாதோரும் சமமாவார்களா?"**
**(சூரா அஸ் ஸுமர் : 9)**

يَرْفَعِ اللَّهُ الَّذِينَ آمَنُوا مِنكُمْ وَالَّذِينَ أُوتُوا الْعِلْمَ دَرَجَاتٍ ۚ وَاللَّهُ بِمَا تَعْمَلُونَ خَبِيرٌ ﴿١١﴾

**"உங்களில் ஈமான் கொண்டு அறிவு கொடுக்கப்பட்டுள்ளவர்களுடைய தகுதிகளை அள்ளாஹ் உயர்த்துவான்."**
**(சூரா அல் முஜாதிலா : 11)**

இதனைப் பெற்று அதன்படி நடக்கக்கூடியோரையும், மேலும் இம் மக்களது வழியைப் பின்பற்றக் கூடியோரையும் அள்ளாஹ் புகழக் கூடிய அந்த அறிவு என்ன?

இதற்கான பதிலை ஷைஃகுல் இஸ்லாம் இப்னு தைமியா அவர்களது மாணவர் இமாம் இப்னுல் கைய்யிம் அவர்கள் கூறியுள்ளார்கள்:

**'அறிவு என்பது அள்ளாஹ் கூறியதும், அவனது தூதர் (ﷺ) அவர்கள் கூறியதும், நபித் தோழர்கள் கூறியதுமாகும். இது பொய்யானதல்ல. (மாறாக) அறிவு என்பது ஒரு ஃபகீஹ் (எனும் ஃபிக்ஹு க் கலை அறிஞரின்) கருத்துக்கும், தூதர் (ﷺ) அவர்களுக்கும் இடையே மடத்தனமாக கருத்து முரண்பாட்டினை ஏற்படுத்தும் விதமாக அவசரப்படுவதோ, தஷ்பீஹ், தம்ஸீல்[6] என்பவையில் வீழ்ந்து விடுவோம் என்ற அச்சத்தால் (அள்ளாஹ்வின்) பண்புகளை மறுத்து புறக்கனித்துவிடுவதோ அல்ல.'**

ஆகவே நாம் அறிவுக்கான வரைவிலக்கணத்தை இந்த கூற்றிலிருந்தும் கவிதையிலிருந்தும் பெற்றுக் கொள்கின்றோம், இவ்வாறானவைகளை கவிஞர்களிடமிருந்து நாம் கேட்பது கஷ்டமாகும். ஏனெனில் அறிஞர்களின் கவிதையென்பது பிற கவிஞர்களின் கவிதைகளைப் போல் அல்ல. ஆகவே இம் மனிதர் (அதாவது இப்னுல் கைய்யிம்) ஒரு அறிஞர், அவ்வாறே அவர் நல்ல கவிதைகளையும் எழுதியுள்ளார். ஆதலால் அவர் கூறுகின்றார்: அறிவு என்பது அள்ளாஹ் கூறியது - இது முதல் நிலை, பிறகு அவனது தூதர் (ﷺ) அவர்கள் கூறியது - இது இரண்டாவது நிலை, அதன் பிறகு நபித்தோழர்கள் கூறியது - இது மூன்றாவது நிலை. இப்னுல் கைய்யிம் அவர்களுடைய இவ் வார்த்தைகள் மிகவும் முக்கியமான ஒரு உண்மையை ஞாபகப்படுத்துகின்றது, மேலும் இது இன்று அனைத்து நாடுகளிலும் இஸ்லாத்தின்பால் அழைக்கின்றோம் எனக் கூறிக்கொள்ளும் மிகப் பெரும்பான்மையான அழைப்பாளர்களால் புறக்கணிக்கவும்படுகின்றது. இந்த உண்மை என்ன? அனைத்து இஸ்லாமிய அழைப்பாளர்களும் நன்கு தெரிந்து வைத்துள்ளது

யாதெனில், இஸ்லாம் அள்ளாஹ்வின் வேதத்தினையும் அள்ளாஹ்வின் தூதர் (ﷺ) அவர்களது சுன்னாவையும் உள்ளடக்குகின்றது என்பதாகும். இது சத்தியமாகும் மேலும் இதில் எந்த சந்தேகமும் இல்லை, ஆனாலும் இதுவோ குறைபாடுடையதாகும்.

இக் குறைபாட்டை இப்னுல் கைய்யிம் தனது கவிதை வரிகளில் சுட்டிக் காட்டுகின்றார்கள், இதனையே நாம் சற்று முன்பு குறிப்பிட்டோம். அதுவே அல் குர்ஆனையும் சுன்னாவையும் குறிப்பிட்டதன் பின் அவர்கள் நபித்தோழர்களைக் குறிப்பிடுகின்றார்கள். **“அறிவு என்பது அள்ளாஹ் கூறியதும், அவனது தூதர் (ﷺ) அவர்கள் கூறியதும், நபித்தோழர்கள் கூறியதுமாகும்...”**

இக்காலத்தில், அல் குர்ஆனையும் சுன்னாவையும் குறிப்பிடும்போது நபித்தோழர்களைப் பற்றிக் குறிப்பிடுவது மிகக் குறைவு. நாம் அனைவரும் அறிந்துள்ளோம், அவர்களே ஸலஃபுஸ் ஸாலிஹ் (எனும் நன் முன்னோரின்) தலைவர்களாவர், அவர்கள் பற்றியே தூதர் (ﷺ) அவர்கள் தனது வார்த்தையில் கூறினார்கள், இது பல நபித்தோழர்களால் அறிவிக்கப்பட்டும் உள்ளது: “மனிதர்களில் சிறந்தவர்கள் எனது தலைமுறையினர்.” இக் காலங்களில் பெரும்பாலான அழைப்பாளர்கள் கூறுவது போல ‘தலைமுறையில் சிறந்தவர்கள்’ என (அந்த ஹதீஸை) கூறாதீர்கள். ‘தலைமுறையில் சிறந்தவர்கள்’ என்ற வாசகத்திற்கு சுன்னாவில் எந்த ஆதாரமுமில்லை. (புஃகாரி, முஸ்லிம் போன்ற) இரு ஸஹீஹ்களில் அறிவிக்கப்பட்டுள்ளதும், ஏனைய ஹதீஸ் கிரந்தங்களிலும் உள்ள ஆதாரபூர்வமான சுன்னாவின் வார்த்தை எதுவெனில்: **“மக்களில் சிறந்தவர்கள் எனது தலைமுறையினர், பிறகு அவர்களுக்குப் பின் வந்தோர், பிறகு அவர்களுக்குப் பின் வந்தோர்.”**[7]

இமாம் இப்னுல் கைய்யிம் அவர்கள் இந் நபித்தோழர்களை இணைத்துள்ளார்கள்; அவர்களே அல் குர்ஆனுக்கும் சுன்னாவுக்குமான தமது சிறப்பிற்காக நற் சான்றிதழ் பெற்ற மூன்று தலைமுறையினதும்

தலைவர்களாவர். ஆகவே அவர் (அதாவது இமாம் இப்னுல் கைய்யிம் தனது கவிதையில்) செய்துள்ள இவ் இணைப்பு தவறுகள் நிகழ சாத்தியமான தனது சுய கருத்தின்படியானதா, அல்லது ஒரு அறிஞரின் அனுமானத்தினதும் முடிவினதும்படியானதா? இல்லை.

நிச்சயமாக, இது அல்லாஹ்வின் வேதத்தினதும் அல்லாஹ்வின் தூதர் (ﷺ) அவர்களது ஹதீஸினதும் அடிப்படையிலானதாகும். அல் குர்ஆனைப் பொறுத்த வரை, அல்லாஹ் عَزَّوَجَلَّ வின் வாக்கானது:

وَمَن يُشَاقِقِ ٱلرَّسُولَ مِنۢ بَعۡدِ مَا تَبَيَّنَ لَهُ ٱلۡهُدَىٰ وَيَتَّبِعۡ غَيۡرَ سَبِيلِ ٱلۡمُؤۡمِنِينَ نُوَلِّهِۦ مَا تَوَلَّىٰ

وَنُصۡلِهِۦ جَهَنَّمَۖ وَسَآءَتۡ مَصِيرًا ﴿١١٥﴾

**"தனக்கு நேர்வழி தெளிவானதன் பின், யார் இத் தூதருக்கு மாறு செய்து, மேலும் முஃமீன்களது வழியல்லாத வழியினைப் பின்பற்று கின்றானோ, அத்தகையவனை அவனது அவ் வழியிலேயே விட்டு, பிறகு நரகில் நுழையச் செய்வோம், (அதுவோ) மிக மோசமான செல்லுமிடமாகும்." (சூரா அந் நிஸா:115)**

"தனக்கு நேர்வழி தெளிவானதன் பின், யார் இத் தூதருக்கு மாறு செய்வானோ, அத்தகையவனை அவனது அவ் வழியிலேயே விட்டு, பிறகு நரகில் நுழையச் செய்வோம்." என ஏன் நம்முடைய ரப் இவ்-வசனத்தை சுருக்கி நிறுத்தவில்லை? அவன் அவ்வாறு சுருக்கியிருப்பி-னும் அது சரியானதாயும் உண்மையானதாயும் இருந்திருக்கும்.

மாறாக, அவனது முடிவேயற்ற விவேகத்தின் காரணமாக, அவன் **"மேலும் முஃமீன்களது வழியல்லாத வழியினைப் பின்பற்றுகின்றானோ"** என்பதாகவும் சேர்த்துள்ளான். இது பற்றியே நாம் இப்போது விளக்குவதற்கு கவனம் செலுத்துகின்றோம். **"தனக்கு நேர்வழி தெளிவானதன் பின், யார் இத் தூதருக்கு மாறு செய்து, மேலும் முஃமீன்களது வழியல்லாத வழியினைப் பின்பற்றுகின்றானோ,**

**அத்தகையவனை அவனது அவ் வழியிலேயே விட்டு, பிறகு நரகில் நுழையச் செய்வோம், (அதுவோ) மிக மோசமான செல்லுமிடமாகும்.''** (சூரா அந் நிஸா:115)

இவ் வசனம் உங்கள் சிந்தனைகளிலும் உள்ளங்களிலும் ஆழமாக பதிய வேண்டுமென நான் எதிர்பார்க்கின்றேன், இதனை நீங்கள் மறந்து விடக் கூடாதெனவும் நான் எதிர்பார்க்கின்றேன், ஏனெனில் இதுவே சத்தியமாகும். மேலும் இதன் மூலமே நீங்கள் வழி தவறாமல் காக்கப்படுவீர்கள்; இடப்புறமாகவோ அல்லது வலப்புறமாகவோ விலகிச் செல்வதிலிருந்து காக்கப்படுவீர்கள். (குறிப்பிட்ட) இவ் விடயத்திலோ அல்லது சில விடயங்களிலோ பாதுகாப்புப் பெறாத ஒரு பிரிவில் வீழ்வதிலிருந்தும் அல்லது வழிகேடான பிரிவுகளில் வீழ்வதிலிருந்தும் (காப்பாற்றப்படுவீர்கள்.) இது எதனாலெனில், தூதர் (ﷺ) அவர்கள் பிரபல்யமான ஒரு ஹதீஸில் கூறினார்கள், நம்முடைய கலந்துரையாடலுக்கு எடுத்துக்கொண்டுள்ள விடயத்திற்கு பொருத்தமானதை எடுத்துக் கொள்ள அதனை நான் சுருக்கிக் கொள்கின்றேன்:

**''என்னுடைய இந்த உம்மத் எழுபத்தி மூன்று பிரிவுகளாகப் பிரியும் - அவ் அனைத்துமே நரகிலிருக்கும், ஒன்றைத் தவிர.''** அவர்கள் கேட்டார்கள்: ''அல்லாஹ்வின் தூதரே அந்தப் பிரிவு எது?'' தூதர் (ﷺ) கூறினார்கள்: **''அதுவே ஜமாஅத் (ஆகும்).''**[8]

(இங்கு) **''ஜமாஅத்''** என்பது **''முஃமீன்களது வழி''**. ஆகவே இந்த தூதருக்கு மாறு செய்து யாரொருவன் முஃமீன்களது வழியல்லாத வழியினைப் பின்பற்றுகின்றானோ அத்தகையவன் நரகைக் கொண்டு அச்சுறுத்தப்பட்டுள்ளான், அவ்வாறாயின் அதற்கு எதிரானதும் அதாவது யாரொருவர் முஃமீன்களது வழியினைப் பின்பற்றுவாரோ, அப்போது அவருக்கு சுவனம் வாக்களிக்கப்படுகிறது, இதில் எந்த சந்தேகமும் இல்லை. ஆகவே அல்லாஹ்வின் தூதர் (ﷺ) அவர்கள் பாதுகாக்கப்பட்ட பிரிவு எது என்பது தொடர்பாக பதிலளிக்கும்போது கூறினார்கள்: ''அல் ஜமாஅத்''. ஆகவே ஜமாஅத் என்பது முஸ்லிம்களின் ஒரு குழு. இந்த ஹதீஸினுடைய மற்றொரு அறிவிப்பு இவ்

விளக்கத்தைப் பலப்படுத்துவதாயுள்ளது, மெய்யாகவே, அது (இந்த ஜமாஅத்) விடயமாக அதிகம் தெளிவுபடுத்துவதாயும் உள்ளது; தூதர் (ﷺ) அவர்கள் கூறினார்கள்: **"அவர்கள் நானும் எனது தோழர்களும் இருப்பதன் மீதிருப்போர்."**[9]

**"எனது தோழர்கள்"** (என்ற தொடர்) குறிப்பது முஃமீன்களது பாதையினையாகும். ஆகவே இப்னுல் கைய்யிம் அவர்கள் நாம் ஏற்கனவே குறிப்பிட்ட அவரது கவிதையில் நபித்தோழர்கள் என்பதனை எடுத்துக் கொண்டது நாம் இப்போது குறிப்பிட்ட வசனத்திலிருந்தும் ஹதீஸில் இருந்துமேயாகும்.

அல் இர்பால் பின் ஸாரியா (ﷺ) அவர்களிடமிருந்து அறிவிக்கப்பட்டுள்ள மற்றொரு பிரபல்யமான ஹதீஸ், அதிலும் நமது கலந்துரையாடலுக்குத் தேவையான பகுதியை மட்டும் சுருக்கிக் கொள்கின்றேன்: **"ஆகவே எனது சுன்னாவையும் எனக்குப் பின் நேர்வழி நடந்த ஃகலீஃபாக்களது சுன்னாவையும் பற்றிக் கொள்ளுங்கள்."**[10]

ஆகவே நாம் ஏற்கனவே குறிப்பிட்ட ஹதீஸிலும் வசனத்திலும் உள்ளது போன்ற உதாரணத்தை இங்கும் காணலாம். தூதர் (ﷺ) அவர்கள் எனது சுன்னாவைப் பற்றிக் கொள்ளுங்கள் என்று மட்டும் கூறவில்லை, மாறாக அவர்கள் தனது சுன்னாவோடு நேர்வழி பெற்ற ஃகலீஃபாக்களது சுன்னாவையும் இணைக்கின்றார்கள்.

ஆகவே இங்கு இந்த வசனத்திலும் இவ்விரண்டு ஹதீஸ்களிலும் நமக்கு பதில் கொடுக்கப்பட்டுள்ளது, சற்று முன்பே அதனைக் குறிப்பிட்டோம். முஃமீன்களது பாதையினை பின்பற்றுதல்! தற்போதுள்ள முஃமீன்களது பாதையினைப் பின்பற்றுதலா? இல்லை, அதாவது கடந்த கால முஃமீன்கள் - முதலாவது காலகட்டம் - நபித் தோழர்களது காலகட்டம் - ஸலஃபுஸ் ஸாலிஹீன்கள்[11]. இவர்களையே நாம் நமது முன்மாதிரிகளாக எடுத்துக்கொள்ள வேண்டும், மேலும் (ஸலஃபுஸ் ஸாலிஹீன்களான அவர்களையே) நாம் பின்பற்றக் கூடியோராய்க் கொள்ளவும் வேண்டும். முற்றிலும் எந்த ஒருவரும் இப்

பூமியின் மீது அவர்களுக்கு சமமாக மாட்டார்கள். ஆகவே, நமது அழைப்பு மூன்று தூண்களை அடிப்படையாகக் கொண்டுள்ளது – (1) அல் குர்ஆன் (2) அஸ் சுன்னா (3) ஸலஃபுஸ் ஸாலிஹீன்களை பின்பற்றுதல் என்பன மீதாகும்.

எனவே எவனொருவன் தான் அல் குர்ஆனையும் சுன்னாவையும் பின்பற்றுவதாக உரிமைகோரி ஸலஃபுஸ் ஸாலிஹீன்களை பின்பற்றாது, அவர்களும் எம்மைப் போன்ற மனிதர்கள் என தனது சொல்லாலும் செயலாலும் வெளிப்படுத்துவானேயாயின், அப்போது அவ்வாறு கூறக் கூடிய இம் மனிதன் (நேர்வழியில் இருந்து) விலகி வழி தவறியவனாவான். ஏன்? ஏனெனில் நாம் சற்று முன் உங்களுக்கு அறிவித்த, (அல் குர்ஆனினதும் ஹதீஸ்களினதும்) இவ் வசனங்களை அவன் ஏற்றுக் கொள்ளவில்லை. அவன் "முஃமீன்களது பாதை"யைப் பின்பற்றினானா? இல்லை. அவன் அள்ளாஹ்வின் தூதர் (ﷺ) அவர்களது தோழர்களைப் பின்பற்றினானா? இல்லை. (அவ்வாறாயின்) அவன் எதனைப் பின்பற்றினான்? அவன் தனது மனோ இச்சையைப் பின்பற்றினான், அவன் தனது சுய புத்தியைப் பின்பற்றினான். ஒருவனது புத்தி தவறுகளிலிருந்தும் பாவங்களிலிருந்தும் நீக்கம் பெற்றதா? பதில் இல்லை என்பதாகும். அப்போது அவன் தெளிவான வழிகேட்டில் இருக்கின்றான். நன்கு அறியப்பட்ட அன்றைய பல பிரிவுகளில் காணப்பட்ட இயல்பான அவர்களது முரண்பாடுகளுக்கும் சமீப காலங்களில் தோன்றியுள்ள முரண்பாடுகளுக்குமான காரணம், ஸலஃபுஸ் ஸாலிஹீன்கள் என்ற இம் மூன்றாவது அடிப்படைக்கு திரும்பாமையே என நான் நம்புகின்றேன்.

ஆகவே (கொள்கையில் வேறுபட்ட) ஒவ்வொருவரும் தான் அல் குர்ஆனையும் சுன்னாவையும் பின்பற்றுவதாகக் கூறிக் கொள்கின்றனர். 'சகோதரரே! இந்த மக்கள் அல் குர்ஆனையும் சுன்னாவையும் பின்பற்றுவதாகக் கூறகின்றார்கள், அந்த மக்களும் அல் குர்ஆனையும் சுன்னாவையும் பின்பற்றுவதாகக் கூறுகின்றார்கள்.' (என்ற) இவ்வாறான கதைகளை எவ்வளவு தடவை நாம் குழம்பிப்போன வாழிபர்களிடமிருந்து கேட்கின்றோம்.

எனவே தெளிவானதும் தீர்க்கமானதுமான வேறுபாடென்ன? அது தான் அல் குர்ஆனும் சுன்னாவும் மேலும் ஸலஃபுஸ் ஸாலிஹீன்களது

மன்ஹஜும்[12] ஆகும். ஆகவே யாரெல்லாம் அல் குர்ஆனையும் சுன்னாவையும் ஸலஃபுஸ் ஸாலிஹீன்களைப் பின்பற்றாது பின்பற்றுகின்றாரோ, அவர் மெய்யாகவே அல் குர்ஆனையும் சுன்னாவையும் பின்பற்றவில்லை, மாறாக அவர் தனது மனோ இச்சையைப் பின்பற்றவில்லையாயின், (குறைந்தபட்சம்) தனது புத்தியைப் பின்பற்றியுள்ளார்.

ஸலஃபுஸ் ஸாலிஹீன்களது மன்ஹஜ் (முறைமை) எனும் இம் முக்கிய விடயத்தை தெளிவுபடுத்துவதற்காக சில உதாரணங்களை நான் முன்வைக்கின்றேன். அல் ஃபாரூக் உமர் இப்னுல் ஃகத்தாப் (ﷺ) அவர்களுடைய கூற்றொன்றுள்ளது, அதில் அவர்கள் கூறுகின்றார்கள்: "பித்அத்காரர்களும், மனோ இச்சையில் உழலும் மக்களும் உங்களோடு அல் குர்ஆனைக் கொண்டு வாதிப்பார்களேயாயின் நீங்கள் சுன்னாவைக் கொண்டு வாதியுங்கள்..." உமர் (ﷺ) அவர்கள் இவ்வாறானதொரு கூற்றைக் கூற காரணமானது எது? அதுவே அள்ளாஹ்வின் வாக்கு, அதில் அவன் தனது தூதர் (ﷺ) அவர்களை விழித்துப் பேசுகின்றான்:

**"நாம் உமக்கு ஸிக்ரை இறக்கி வைத்தோம், அப்போது மக்களுக்கு அவர்களுக்காக இறக்கிவைக்கப்பட்டதை உமக்கு விளக்க முடியுமாகும்." (சூரா நஹ்ல்:44)**

அறபு மொழியில் பாண்டித்தியம் பெற்ற, அதனுடைய விதிகள் மற்றும் இலக்கணம் ஆகியவற்றை அறிந்த ஒரு முஸ்லிமால் அல் குர்ஆனை நமது தூதர் (ﷺ) அவர்களது வழிமுறையின்றி விளங்க முடியுமா? அதற்கான பதில் முடியாது என்பதாகும். இது இவ்வாறில்லையாயின் அள்ளாஹ்வின் வாக்கான, "மக்களுக்கு அவர்களுக்காக உமக்கு இறக்கி வைக்கப்பட்டதை விளக்க முடியுமாகும்." என்பதில் எந்த முக்கியத்துவமும் இல்லாதிருக்கும். மேலும் அள்ளாஹ்வின் வாக்கு எந்தவொரு முக்கியத்துவமும் இல்லாததாக ஆகிவிடும். எனவே, எவனொருவன் அல் குர்ஆனை தூதர் (ﷺ) அவர்களது வழிமுறையல்லாத வேறொரு வழிமுறையில் விளங்க முயல்வானோ அத்தகையவன் மிகத் தூரமான வழிகேட்டில் சென்று விட்டான்.

இன்னும், (மேற்கூறப்பட்ட) இம் மனிதனால் அல் குர்ஆனையும் சுன்னாவையும் அள்ளாஹ்வின் தூதர் (ﷺ) அவர்களது தோழர்கள் வழிமுறையல்லாத ஒன்றால் விளங்க முடியுமா? இதற்கான பதிலும்

முடியாது என்பதே. ஏனெனில், முதலாவதாக, முஹம்மத் (ﷺ) அவர்களது உள்ளத்தில் இறக்கியருளப்பட்ட அல் குர்ஆனுடைய வாசகங்களை எமக்கு அறிவித்தவர்கள் நபித்தோழர்களே. இரண்டாவதாக, (அந் நபித் தோழர்களே) ஏற்கனவே கூறிய வசனத்தில் கூறிய நபிகளாரது (அல் குர்ஆனுக்கான) விளக்கத்தையும் இந்த சங்கையான குர்ஆனுக்கான நபி (ﷺ) அவர்களது நடைமுறைப் பிரயோகத்தையும் அறிவித்தார்கள்.

(அல் குர்ஆனுக்கான) நபிகளாரது விளக்கத்தை மூன்று பிரிவுகளாக பிரிக்கலாம்: (1)சொல், (2)செயல், (3) அங்கீகாரம். அவரது சொல்லை அறிவித்தோர் யாவர்? அவரது தோழர்கள். அவரது (ﷺ)செயலை அறிவித்தோர் யாவர்? அவரது தோழர்கள். அவரது (ﷺ) அங்கீகாரத்தை அறிவித்தோர் யாவர்? அவரது தோழர்கள். ஆகவே இதனால், அல் குர்ஆனை விளங்குவதற்கு நமக்கு நமது மொழித் திறனில் மட்டுமே தங்கியிருக்க முடியாது, நிச்சயமாகவே, நாம் அல் குர்ஆனை விளங்குவதில் அவர்கள் துணையை நாட வேண்டும். ஆனாலும் இது தொடர்பாக (அறபு) மொழி எவ்வித தேவையுமற்றது என்பது இதன் கருத்தாகாது.

இதன் காரணமாகவே அறபியல்லாத மொழி பேசும் மக்கள், அறபு மொழிப் பாண்டித்தியமின்றி பற்பல தவறுகளில் வீழ்வதாக நாம் உறுதியாக நம்புகின்றோம். இது விஷேடமாக எதனாலெனில், அவர்கள் அல் குர்ஆனையும் சுன்னாவையும் விளங்குவதில் ஸலஃபுஸ் ஸாலிஹீன்களின்பால் திரும்பாதிருக்கும் அடிப்படைத் தவறேயாகும். நான் ஏற்கனவே கூறிய வார்த்தைகளின் மூலம் அல் குர்ஆனை விளங்க (அறபு) மொழியில் தங்கியிருக்க முடியாது என நான் கருதவில்லை. நாம் அறபு சொற்களை விளங்க வேண்டுமாயின், எந்த சந்தேகமுமின்றி நாம் அறபு மொழியை விளங்கியாக வேண்டும்.

அல் குர்ஆனையும் சுன்னாவையும் இவ்வாறு விளங்குவதற்காக, ஒருவர் அறபு மொழியை விளங்கியாக வேண்டும். ஆகவே நாம் கூறுகின்றோம், முதற்சொன்ன வசனத்தில் குறிப்பிடப்பட்ட, தூதர் (ﷺ) அவர்களது விளக்கம் மூன்று வகைகளாகப் பிரிக்கப்படும்: சொற்கள், செயல்கள் மற்றும் அங்கீகாரங்கள்.

இவ் வகையீடு சர்ச்சைக்குட்பட முடியாத ஓர் நிலைநிறுத்தப்பட்ட உண்மை என்பதை விளக்குமுகமாக நாம் ஒரு உதாரணத்தைத் தருகின்றோம். அள்ளாஹ் கூறுகின்றான்:

“திருடர், திருடியர்களது கைகளைத் துண்டியுங்கள்...” (சூரா அல் மாஇதா:38)

மொழியை மட்டும் மையமாகக் கொண்டு அல் குர்ஆனை விளக்குவது நமக்கு சாத்தியமில்லை என்பதை இப்போது பாருங்கள். மொழியின்படி திருடன் என்பவன் ஒரு தடுக்கப்பட்ட இடத்திலிருந்து சொத்தை, அதற்கு பெறுமதியுண்டா இல்லையா என்ற தொடர்பின்றி களவாடியவனாவான். உதாரணமாக, ஒருவன் ஒரு முட்டையைக் களவாடுகின்றான் அல்லது ஒரு இராத்தல் பானை களவாடுகின்றான். (அறபு) மொழியின்படி இத்தகையவன் திருடனாகக் கருதப்படுவான்.

அள்ளாஹ் கூறுகின்றான்: “திருடர், திருடியர்களது கைகளைத் துண்டியுங்கள்.” களவாடுகின்ற ஒவ்வொருவனது கையையும் துண்டிக்க வேண்டுமா? பதில் இல்லையென்பதாகும். ஏன்? ஏனென்றால் இதனை விளக்குகின்ற நபிகளார் (ﷺ) அவர்களே அல் குர்ஆனை விளக்கும் பொறுப்புக் கொடுக்கப்பட்டவர், ஆகவே அவர்கள் திருடர்களில் எத்தகையவர்களது கரங்கள் துண்டிக்கப்பட வேண்டும் என நமக்கு அறிவித்துள்ளார்கள். (ஆகவே இதற்கு) விளக்கமளிப்பவர் நபிகளார் மற்றும் விளக்கப்படக் கூடியது அல் குர்ஆன் ஆகும். அவர்கள் (ﷺ) கூறினார்கள்: **“கால் தீனாருக்காகவோ அதற்குக் கூடுதலாகவோ அன்றி கையைத் துண்டிக்க வேண்டாம்.”**

எனவே யாரொருவன் கால் தீனாருக்குக் குறைந்த பெறுமதியுடைய ஒன்றைத் திருடுகின்றானோ, அவன் மொழியின் அடிப்படையில் திருடன் என அழைக்கப்படினும், மார்க்கத்தினது வரைவிலக்கணத்தின்படி அவன் திருடனாகக் கணிக்கப்பட மாட்டான். ஆகவே இங்கு நாம் இந்த அறிவின் அடிப்படையில் ஓர் உண்மையை விளங்கிக் கொள்கின்றோம், அதனை பெரும்பாலான அறிவு தேடும் மாணவர்கள் அறியாதுள்ளனர். ஒருபக்கத்தில் நம்மிடம் தலைமுறை தலைமுறையாக கையளிக்கப்பட்ட அறபு மொழியுள்ளது. மறு புறத்தில் அள்ளாஹ்வே வரையறுத்து வரைவிலக்கணப்படுத்திய மார்க்கத்தினது மொழி நம்மிடம்

உள்ளது. அதனை (அதாவது அறபு மொழியை) அறபிகள் பேசி-னார்கள், அதில்தான் அல் குர்ஆனும் இறக்கப் பெற்றது. (ஆனாலும்) அதற்கு முன் அவர்கள் (மார்க்கத்தினது இவ்வரைவிலக்கணங்களை) அறிந்திருக்கவில்லை.

ஆகவே திருடன் என்ற பதம் (அறபு) மொழியின்படி பிரயோகிக்கப்-படின், அது அனைத்துத் திருடர்களையும் உள்ளடக்குகின்றது. எனினும் மார்க்கப் பரிபாஷையின்படி அனைத்துத் திருடர்களும் உள்ளடக்கப்பட மாட்டார்கள், ஆயினும் குறிப்பாக கால் தீனாருக்குச் சமனான அல்லது மேலானதைத் திருடுபவனே உள்ளடக்கப்படுவான். எனவே இதுவோர் உண்மையான உதாரணமாகும், அல் குர்ஆனை-யும் சுன்னாவையும் விளங்க நமது அறபு மொழி அறிவில் மட்டுமே தங்கியிருப்பது நமக்கு சாத்தியமில்லை. இதுவே இக் காலங்களில் சமகால எழுத்தாளர்கள் வீழ்ந்துள்ள தவறாகும். அவர்கள் தமது அறபு மொழியறிவை குர்ஆனிய வசனங்களுக்கும் நபிகளாரின் ஹதீஸ்-களினுடைய வாசகங்களுக்கும் மேலாக வைக்கின்றனர். ஆகவே இம் மார்க்க வாசகங்களுக்கு விளக்கங் கொடுப்பதன் மூலம் நூதனமான விளக்கங்களோடு வருகின்றனர், அவற்றை கடந்த கால முஸ்லிம்கள் கேட்டதே இல்லை.

இதனால் நாம் கூறுகின்றோம், சத்திய இஸ்லாத்தை விளங்கிக் கொள்வதற்கு மூன்று நியதிகளையும் அடிப்படைகளையும் விளங்கிக் கொள்வது கடமையாகும், அவையாவன 1)அல் குர்ஆன், 2)அஸ் சுன்னா, 3)ஸலஃபுஸ் ஸாலிஹீன்களது வழிமுறையும் விளக்கமும் ஆகும். ஆகவே, “திருடர், திருடியர்களது...” என்ற வசனம் மொழி வழக்கில் உள்ள விதமாக விளக்கப்பட முடியாது, ஆனாலும் மார்க்க மொழியின் அவசியங்களின் அடிப்படையில், (“திருடர், திருடியர்களது...” என்பது) “கால் தீனாருக்காகவோ அதற்குக் கூடுதலாகவோ அன்றி கையைத் துண்டிக்க வேண்டாம்.” என்று கூறுகின்றது.

இவ் வசனத்தின் எஞ்சிய பகுதி “...கரங்களைத் துண்டியுங்கள்” எனக் கூறுகின்றது. மொழியின்படி கரம் என்பது என்ன? விரல்கள் முதல் அக்குள் வரையுள்ள அனைத்துப் பகுதியும் (கையாகக்) கருதப்படுகின்றது. ஆகவே கை இங்கிருந்து துண்டிக்கப்பட வேண்டுமா? அல்லது இங்கிருந்து துண்டிக்கப்பட வேண்டுமா? அள்ளாஹ்வின் தூதர் (ﷺ) அவர்கள் இதனை தனது செயலால்

விளக்கியுள்ளார்கள். (அதாவது மணிக்கட்டால் துண்டிக்கப்பட வேண்டுமென்பதாகக் காட்டியுள்ளார்கள்.)

எத்தகைய திருடனது கரங்கள் துண்டிக்கப்பட வேண்டும் எனக் கூறும் எங்களிடம், எந்தப் பகுதியை நாம் துண்டிக்க வேண்டும் என்ற எந்தவொரு ஆதாரபூர்வமான ஹதீஸூம், அதாவது தூதர் (ﷺ) அவர்களது சொல்லாலான விளக்கம் எம்மிடம் இல்லை. பதிலாக, அவரது செயலாலான விளக்கம் - அவரது செயல்ரீதியான பிரயோகமே வெளிப் படுத்தப்பட்டுள்ளது. இப் பிரயோகத்தை நாம் எவ்வாறு அறிந்து கொள்கின்றோம் (?) - எமது ஸலஃபுஸ் ஸாலிஹீன்கள் மூலமாக - தூதர் (ﷺ) அவர்களது தோழர்கள் மூலமாக (அறிந்து கொள்கின்றோம்) - இதுவே இரண்டாம் வகையாகும், இது செயல் மூலமான விளக்கமாகும்.

மூன்றாவது வகை யாதெனில், ஒன்றுக்கான அல்லாஹ்வின் தூதர் (ﷺ)அவர்களது அங்கீகாரமாகும், அது அவர் மறுத்தோ தடை செய்தோ இல்லாமல் இருத்தலாகும். இவ் அங்கீகாரம் அவரது சொல்லாலோ அல்லது செயலாலோ வராமல் வேறொருவரது செயல் மூலமாக வந்திருப்பதாகும், அதனை தூதர் (ﷺ) அவர்கள் கண்டு அங்கீகரித்ததாகும். எனவே தூதர் (ﷺ) அவர்கள் ஏதேனுமொன்றைக் கண்டு அதுபற்றி மௌனமாக இருப்பாரேயாயின், அங்கீகரிப்பாராயின், அது அங்கீகரிக்கப்பட்ட ஒன்றாக - அனுமதிக்கப்பட்ட ஒன்றாக மாறிவிடும். ஆனால் அவர் ஏதேனும் ஒன்றைக் கண்டு அதனை மறுத்து விடுவாராயின், இதனை அவரது தோழர்களில் சிலர் செய்ததாயினும் சரியே, அது அவர் மறுத்துள்ளார் என வாசகங்களில் ஆதாரபூர்வமாக நிலைநாட்டப்பட்டுவிடும், அப்போது இம் மறுப்பு அவரது அங்கீகாரத்தினை விட முன்னுரிமை பெற்றுவிடும். இவ் இரண்டு விடயங்களுக்கும் ஹதீஸ்களின்படி நானொரு உதாரணத்தைத் தருகின்றேன். அப்துள்ளாஹ் இப்னு உமர் (رضي الله عنه) அவர்கள் கூறினார்கள்: “ரசூல் (ﷺ) அவர்களது வாழ்நாளில் நாம் நின்றவர்களாகக் குடிக்கக் கூடியோராயும், மேலும் நடந்த நிலையில் உண்ணக் கூடியோராயும் இருந்தோம்.”

ஆகவே இவ் ஹதீஸில் அப்துள்ளாஹ் அவர்கள் இரண்டு விடயங்களை நமக்கு அறிவிக்கின்றார்கள்: 1) நின்ற நிலையில் குடிப்பது

மற்றையது 2) நடந்த நிலையில் உண்பதாகும். மேலும் இவ் இரண்டு விடயங்களையும் தூதர் (ﷺ) அவர்களது காலத்தில் செய்ததாக அவர்கள் அறிவித்துள்ளார்கள். எனவே நின்ற நிலையில் குடிப்பது மற்றும் நடந்த நிலையில் உண்பது ஆகிய இவை இரண்டுக்குமான மார்க்கச் சட்டமென்ன?

நாம் ஏற்கனவே கூறிய குறிப்புக்களை இங்கு பிரயோகிப்போமாயின், நிச்சயமாகவே அதற்குத் தேவையானதை சேர்த்துக் கொள்வதன் மூலம் எம்மால் சட்டத்தைப் பெற்றுக் கொள்ள முடியுமாகும், அதுவே அள்ளாஹ்வின் தூதர் (ﷺ) அவர்கள், தனது சொல்லால், செயலால், அங்கீகாரத்தால் எதனை தடுத்துள்ளார் என்பதை அறிவதாகும். ஆகவே நாம் முதலாவது விடயம் (அதாவது நின்ற நிலையில் குடித்தல்) தொடர்பாக ஆதாரபூர்வமான சுன்னாவை அலசுவோமாயின், ஏராளமான முஸ்லிம்கள், அவர்களில் பெரும்பான்மையினர் இல்லாவிடினும், இது விடயமாக சோதிக்கப்பட்டவர்களாய் உள்ளனர்.

அது எதுவெனில், நின்ற நிலையில் குடித்தவர்களாக அள்ளாஹ்வின் தூதர் (ﷺ) அவர்களது வாக்கிற்கு மாறு செய்தலாகும். அவர்கள் நின்ற நிலையில் குடிக்கின்றனர், அவர்கள் (அதாவது ஆண்கள்) தங்கமும் பட்டும் அணிகின்றனர். இவை யாரும் மறுக்க முடியாத உண்மையாகும். ஆனாலும் தூதர் (ﷺ) அவர்கள் இவை அனைத்தோடும் உடன்படுகின்றார்களா?

பதில் யாதெனில் அவர்கள் இவைகளில் சிலவற்றை தடுத்தும் இவற்றில் சிலவற்றை அனுமதித்தும் உள்ளார்கள். ஆகவே அவர் எவற்றையெல்லாம் தடுத்தார்களோ அவை தீமையானவை (முன்கரானவை என்ற) வரம்புகளை அடைகின்றன. எவற்றையெல்லாம் அனுமதித்தார்களோ அவை நன்மையானவை (மஃரூஃப் என்ற) வரம்புகளை அடைகின்றன. ஆதலால் அவர் (ﷺ) அவர்கள் பல ஹதீஸ்களில் நின்ற நிலையில் குடிப்பதை தடுத்துள்ளார்கள். ஆனாலும் அவை அனைத்தையும் குறிப்பிடுவதன் மூலம் நான் விரிவாகச் செல்லப் போவதில்லை. ஆகவே நாம் முதலாவதாக, இவ் விடயத்தைப் பற்றிப் பேச ஒதுக்கப்பட்டுள்ள நேரத்தை திசை திருப்ப வேண்டியதில்லை, அப்போது இறுதியில் கேள்விகளைப் பெற்றுக் கொள்ள முடியும், மேலும் இரண்டாவதாக, இவ் விடயம் (அதாவது நின்ற நிலையில் குடித்தல் என்ற விடயத்தைப் பற்றி விரிவாக ஆராய) ஒரு தனி அமர்வே

தேவைப்படுகின்றது. ஆனாலும் முஸ்லிம் தனது ஸஹீஹில் பதிவு செய்துள்ள, அனஸ் பின் மாலிக் (ﷺ) அவர்களிடமிருந்துள்ள ஆதாரபூர்வமான ஒரு ஹதீஸை குறிப்பிடுதல் போதுமானதாகும், அவர்கள் கூறினார்கள்: "அள்ளாஹ்வின் தூதர் (ﷺ) அவர்கள் நின்ற நிலையில் குடிப்பதைத் தடுத்தார்க்கள்."

மற்றொரு அறிவிப்பில் அவர்கள் கூறினார்கள்: "அள்ளாஹ்வின் தூதர் (ﷺ) அவர்கள் நின்ற நிலையில் குடிப்பதை மட்டுப்படுத்தினார்கள்." ஆகவே, அள்ளாஹ்வின் தூதர் அவர்களது காலத்தில் செய்யப்பட்ட-தாக இப்னு உமர் (ﷺ) அவர்களது அறிவிப்பில் தெரிவிக்கப்பட்ட (நின்ற நிலையில் குடித்தல்) மட்டுப்படுத்தப்பட்டு தடையும் விதிக்க-ப்பட்டதாகும்.

ஆகவே அவர்கள் செய்து வந்த அவ்விடயம், நபிகளாரின் தடையின் அடிப்படையில் தடுக்கப்பட்டதாக ஆகின்றது. ஆனாலும் (இப்னு உமர் அவர்கள் அறிவிக்கின்ற) ஹதீஸின் இரண்டாம் பகுதி, அவர்கள்-நடந்த நிலையில் உண்பவர்களாக இருந்தனர் என்பது தொடர்பாக அள்ளாஹ்வின் தூதர் (ﷺ) அவர்கள் தடை செய்ததாக எந்தவொரு அறிவிப்பையும் நாம் காணவில்லை. ஆகவே நாம் இந்த (மறைமுக) அனுமதியின் மூலமாக ஒரு மார்க்கச் சட்டத்தைப் பெறுகின்றோம். ஆகவே இதுவரை, அல் குர்ஆனையும் சுன்னாவையும் விளங்க ஸலஃபுஸ் ஸாலிஹீன்களது வழிமுறையில் சார்ந்திருக்க வேண்டிய அவசியத் தேவையை உணரக் கூடியோராய் உள்ளோம். மேலும் எந்த ஒருவரும் அல் குர்ஆனையும் சுன்னாவையும் விளங்க தனது சுய அறிவில் தங்கியிருக்க முடியாது, அவ்வாறாயின் அவரது அறிவீனம் பற்றி கூறத் தேவையே இல்லை.

ஸலஃபுஸ் ஸாலிஹீன்களது முறைமையின் மீது என்ற இந்த முக்கிய நிபந்தனையினை விளக்கியதன் பின்பு, உங்களுக்கு நான் சில உதார-ணங்களை தந்தாக வேண்டும். கடந்த காலத்தில், முஸ்லிம்கள் பல பிரிவுகளாய் பிரிந்தனர். நீங்கள் முஃதஸிலாக்களைப்[13] பற்றி கேள்விப்படு-கின்றீர்கள், நீங்கள் ஃகவாரிஜ்கள்[14] பற்றி கேள்விப்படுகின்றீர்கள், நீங்கள் ஸைதிய்யாக்கள[15] பற்றி கேள்விப்படுகின்றீர்கள், ஷீஆக்களையும்[16] ராஃபிழாக்களையும்[17] இன்னுமுள்ளோரையும் பற்றிக் கூறத் தேவையே இல்லை.

இப் பிரிவுகளில் எந்தவொரு பிரிவும், அவர்களது வழிகேடு எந்தளவு ஆழமாக இருப்பினும் பிரச்சினையில்லை, ஏனைய முஸ்லிம்கள் கூறுவது போல் நாம் அல் குர்ஆனிலும் சுன்னாவிலும் உள்ளோம் என்ற கூற்றை அவர்களும் பகிர்ந்து கொள்ளாமல் இல்லை. அவைகளில் எந்தவொரு பிரிவும் நாம் அல் குர்ஆனையும் சுன்னாவையும் பின்பற்றுவதில்லை எனக் கூறுவதில்லை. மேலும் அவர்களில் ஒருவன் இவ்வாறு கூறுவானாயின், அத்தகையவன் இஸ்லாமிய வரம்பிலிருந்து முழுமையாகவே வெளியேறி விடுவான். ஆகவே அவர்கள் அனைவருமே அல் குர்ஆனிலும் சுன்னாவிலும் சார்ந்திருப்பின் ஏன் பிரிந்தார்கள்? மேலும் அவர்கள் ஆதாரத்திற்கு அல் குர்ஆனிலும் சுன்னாவிலும் தங்கியிருக்கின்றார்கள் என்பதற்கு நான் சாட்சி கூறுகின்றேன். ஆயினும் அவர்கள் எவ்வாறு தங்கியிருக்கின்றார்கள்? இந்த மூன்றாவது அடிப்படையான ஸலஃபுஸ் ஸாலிஹீன்கள் இருந்த (வழிமுறையின்) மீது இல்லாமல் இருக்கின்றார்கள்.

மேலும் மற்றொரு மேலதிகமான விடயமும் இங்கு சுட்டிக் காட்டப்பட வேண்டும். அது யாதெனில், சுன்னா என்பது சங்கையான குர்ஆனிலிருந்து முற்றிலும் வேறுபடுகின்றது, எவ்வகையிலெனில், சங்கையான குர்ஆன் எல்லோரும் அறிந்து வைத்துள்ளதுபோல் முஸ்அஃப் உடைய இரு அட்டைகளுக்கும் இடையே பாதுகாக்கப்பட்டுள்ளது. ஆனாலும் சுன்னாவானது, அதன் பெரும் பகுதி, ஆயிரங்களில் இல்லையெனின், நூற்றுக் கணக்கான நூல்களில் பரவிக் கிடக்கின்றது; அவற்றின் பெரும் பகுதி மறையுலகில் தங்கியுள்ளன, (அதாவது) அச்சேற்றப்படாத கையெழுத்துப் பிரதிகளாய் உள்ளன.

மேலும், இன்று அச்சில் உள்ள நூல்களில், ஆதாரபூர்வமான ஹதீஸ்களும் உள்ளன, பலயீனமான ஹதீஸ்களும் உள்ளன. ஆகவே ஆதாரத்திற்காக சுன்னாவில் தங்கியுள்ளோர், அவர்கள் தங்களை அஹ்லுஸ் சுன்னா வல் ஜமாஅத்திற்கும் ஸலஃபுஸ் ஸாலிஹீன்களின் முறைமைக்கும் உரிமை பாராட்டக் கூடியோராக இருப்பினும் சரியே அல்லது ஏனைய பிரிவுகளில் உள்ளோராயினும் சரியே, அவர்களில் அதிகமானோர் ஆதாரபூர்வமான சுன்னாவையும் பலயீனமான சுன்னாவையும் பிரித்தறிய முடியாதுள்ளனர். எனவே அவர்கள் பலயீனமான மற்றும் இட்டுக்கட்டப்பட்ட ஹதீஸ்களில் தங்கி குர்ஆனுக்கு எதிராக முரண்பாட்டில் வீழ்கின்றனர்.

குறிப்பிடத்தக்க விடயம் யாதெனில், நாம் சொற்ப நேரத்திற்கு முன் குறிப்பிட்ட இக் குழுக்களில் சில, அன்றும் இன்றும், அல் குர்ஆனின-தும் நபிகளாரின் ஹதீஸ்களினதும் சொற்கருத்தை மறுத்தனவாய் உள்ளன. (உதாரணமாக) சங்கைமிகு குர்ஆன் முஃமின்கள் சுவனத்தில் பெறக்கூடிய அருட்கொடையான அகிலத்தின் ரப் தன்னை அவர்களுக்கு வெளிப்படுத்த அவர்கள் அவனை காண்பார்கள் என்பத-னை உறுதிப்படுத்தி நற்செய்தியும் கூறியுள்ளது. ஒரு ஸலஃபி[18] அறிஞர் கூறியுள்ளதுபோல்:

*"விசுவாசிகள் (அள்ளாஹ்வாகிய) அவனைக் காண்பார்கள், (நாம் இதனை நம்பிக்கைக் கொள்கிறோம்) அவனை எவ்வாறு (காண்பார்கள்) என்று (கேள்வி கேட்காமலும்), அதற்கு ஒப்புவமை காணா-மலும், அவ்வாறே அதற்கு உதாரணங்களைக் கூறாமலும் (அவன் எவ்வாறு கூறியுள்ளானோ அவ்வாறே ஈமான் கொள்கின்றோம்)."*

அல் குர்ஆனினதும் அஸ் சுன்னாவினதும் வாசகங்களது ஆதாரங்கள் இதனை (அதாவது முஃமின்கள் தம்முடைய ரப்பை மறுமையில் நேரடி-யாகக் காண்பர் என்பதனை) சுட்டிக் காட்டுகின்றன. அவ்வாறாயின் அன்றைய மற்றும் இன்றைய பிரிவுகள் எவ்வாறு இந்த மகத்தான அருளை மறுக்க முடியும்? கடந்த காலத்தில் அள்ளாஹ்வை பார்த்தல் தொடர்பான விடயத்தை மறுத்த பிரிவு முஃதஸிலாவாகும். இன்று நானறிந்த வரை, இந்த பூமியின் மேற்பரப்பில் "நாங்கள் முஃதஸிலா-க்கள், நாம் முஃதஸிலாக்களின் நம்பிக்கைக் கோட்பாட்டைப் பின்-பற்றுகின்றோம்" எனக் கூறக் கூடிய எந்தவொரு கூட்டமும் காணப்-படவில்லை. எவ்வாறாயினும், பகிரங்கமாகவே தானொரு முஃதஸிலி என அறிவித்த ஒரு மடமையான மனிதனை நான் கண்டேன். அத்-தோடு அவன் மார்க்கத்தினுடைய நிரூபனமான உண்மைகள் பல-வற்றை மறுத்து, மடத்தனமாக நடக்கின்றான்.

ஆகவே இம் முஃதஸிலாக்கள் இம் மகத்தான அருளை மறுத்து, 'அள்ளாஹ் தோற்றமளிப்பது சாத்தியமானதல்ல' என்பதாக தமது பலயீனமான புத்தியினால் கூறுகின்றனர். எனவே அவர்கள் செய்வ-தென்ன? அவர்கள் அல் குர்ஆனை மறுத்தனரா? அள்ளாஹ் அல் குர்ஆனில் கூறுகின்றான்:

وُجُوهٌ يَوْمَئِذٍ نَّاضِرَةٌ ﴿٢٢﴾ إِلَىٰ رَبِّهَا نَاظِرَةٌ ﴿٢٣﴾

"அந் நாளில் தம்முடைய ரப்புடைய முகத்தைப் பார்த்தவாறு முகங்கள் பிரகாசமாக இருக்கும்." (சூரா அல் கியாமா:22-23)

அவர்கள் இந்த வசனத்தை மறுக்கின்றனரா? இல்லை, அவர்கள் இவ் வசனத்தை மறுக்கவும் இல்லை, விசுவாசிக்காமலும் இல்லை, நிராகரிக்கவும் இல்லை. இன்றுவரை உண்மையான அஹ்லுஸ் சுன்னா, முஃதஸிலாக்கள் வழிகேட்டில் இருக்கின்றனர் என்றதேயன்றி அவர்களை மார்க்கத்திலிருந்து வெளியேற்றவில்லை. ஏனெனில் அவர்கள் இவ் வசனத்தை நிராகரிக்கவில்லை, ஆனாலும் அவர்கள் இதனுடைய சுன்னாவில் கூறப்பட்டுள்ள உண்மையான கருத்தை நிராகரித்தனர்.

நாம் மீண்டும் ஞாபகப்படுத்திக் கொள்வோமாயின், சுவனம் பிரவேசிக்கும் விசுவாசிகள் பற்றி அள்ளாஹ் கூறுகின்றான்: "அந் நாளில் தம்முடைய ரப்புடைய முகத்தைப் பார்த்தவாறு முகங்கள் பிரகாசமாக இருக்கும்..." அவர்கள் இதன் கருத்தை மாற்றினர்; அவர்கள் இவ் வசனத்தில் நம்பிக்கை கொள்கின்றனர், ஆனாலும் இதன் கருத்தை நிராகரிக்கின்றனர். அறிஞர்கள் கூறுவது போல வார்த்தையே கருத்தின் அச்சாகும். ஆகவே நாம் வார்த்தையை நம்பிக்கைக் கொண்டு கருத்தை நிராகரித்தால், அப்போது அந் நம்பிக்கை (ஈமான்) பசியைப் போக்கவோ அல்லது சக்தியூட்டவோ மாட்டாது. அதாவது வசனத்தை மட்டும் வெறுமனே நம்பி அதன் கருத்தை நிராகரிப்பதானது எந்தப்பயனையும் ஏற்படுத்தாது.

ஏன் இவர்கள் அள்ளாஹ்வைக் காண்பதை நிராகரிக்கின்றனர்? அவர்களது சிந்தனைகள் இந்த அடியானை (அப்தை) உருவகப்படுத்துவதனாலும் கருத்தாக்கம் செய்து காண்பதனாலும் இறுக்கமடைந்துள்ளன, எவ்வாறெனில் அள்ளாஹ்வை வெளிப்படையாகவே காண்பதற்கான அடியானின் ஆற்றல் மட்டுப்படுத்தப்பட்டது (என அவர்கள் ஊகிக்கின்றனர், எதனாலெனில்) யூதர்கள் மூஸாவிடம் (அள்ளாஹ்வைக் காட்டுமாறு) கேட்டபோது (அல் குர்ஆனில் கூறப்பட்டு) நன்கு அறியப்பட்டுள்ள சம்பவத்தில் உள்ளது போல் அள்ளாஹ் தன்னை அவர்களுக்கு (அவ்வாறு காட்டுவதிலிருந்து) தடுத்துக் கொண்டான்:

**"இம் மலையைப் பார்ப்பீராக, அது இதற்குப் பிறகும் நின்றவாறிருப்பின், அப்போது நீங்கள் என்னைக் காண்பீர்கள்." (சூரா அல் அஃராஃப் : 143)**

அவர்களுடைய புத்தி குறுகியதாய் இருந்தது, ஆகவே அவர்கள் குர்ஆனிய வசனத்தோடு விளையாடி அதன் கருத்தை திரிபுபடுத்துவதை கடமையாகக் கண்டார்கள். ஏன்? – எனெனில் மறைவானவை பற்றிய அவர்களுடைய ஈமான் பலயீனமானது மற்றும் தங்களுடைய புத்தியில் அவர்களுக்கு இருக்கக் கூடிய நம்பிக்கை அவர்களுக்கு ஈமான் கொள்ளுமாறு ஏவப்பட்ட மறைவான விடயங்கள் தொடர்பாக அவர்களுக்கு இருக்கக் கூடிய நம்பிக்கையைவிடவும் மிக உறுதியானது.

சூரா அல் பகராவின் ஆரம்பத்தில்: **"அலிஃப் லாம் மீம். இது வேதமாகும் என்பதில் சந்தேகமேயில்லை, முத்தகீன்களுக்கு ஒரு நேர்வழிகாட்டியாகும்... அவர்கள் (யாரெனில்) மறைவானதில் ஈமான் கொள்ளக் கூடியோர்."**

அள்ளாஹ் மறைவானவன், ஆகவே நம்முடைய ரப் எப்போதெல்லாம் தன்னைப் பற்றி பேசுகின்றானோ, நாம் அதனை உண்மையென உறுதிப்படுத்தியாக வேண்டும், மேலும் அதனை ஈமான் கொள்ள வேண்டும், ஏனென்றால் நமது புத்தி மிகவும் மட்டுப்படுத்தப்பட்டதாகும். இந்த விஷயத்தை முஃதஸிலாக்கள் ஏற்றுக் கொள்ளவில்லை. அள்ளாஹ்வுடைய வார்த்தையான, **"அந் நாளில் தம்முடைய ரப்புடைய முகத்தைப் பார்த்தவாறு முகங்கள் பிரகாசமாக இருக்கும்"** போன்ற மார்க்கத்தில் நிலை நிறுத்தப்பட்டுள்ள உண்மைகளை இதனால்தான் அவர்கள் மறுத்து நிராகரித்தனர்.

இதுவே மற்றைய வசனம் தொடர்பிலும் ஏற்பட்டது, அது இவர்களுக்கு ஏற்கனவே குறிப்பிட்ட வசனத்தை விடவும் தெளிவற்றதாகும். இது தான் அள்ளாஹ்வின் (அவ்) வசனம்:

۞ لِّلَّذِينَ أَحْسَنُوا۟ ٱلْحُسْنَىٰ وَزِيَادَةٌ

**"நன்மை செய்வோர், (அல் ஹுஸ்னா) நன்மையையும் மற்றும் (அஸ் ஸியாதா) மேலதிகமானதையும் பெறுவர்." (சூரா யூனுஸ் : 26)**

அல் ஹுஸ்னா என்பது இங்கு சுவர்க்கத்தை குறிக்கின்றது, மேலும் ஸியாதா (மேலதிகமானது) என்பது இங்கு, மறுமையில் அள்ளாஹ்-வை காண்பதைக் குறிக்கின்றது. இது ஆதாரபூர்வமான அறிவிப்பாளர் பட்டியலோடு ஸஃத் பின் அபீ வக்காஸ் (ﷺ) அவர்களின் மூலம், ஸஹீஹ் முஸ்லிமில் பதிவாகியுள்ள ஓர் ஹதீஸில் குறிப்பிடப்-பட்டுள்ளது, அவர்கள் அறிவிக்கின்றார்கள்: அள்ளாஹ்வின் தூதர் (ﷺ) அவர்கள் கூறினார்கள்: **“நன்மை செய்வோர், ஹுஸ்னாவைப் பெறுவர், (அதாவது) சுவர்க்கம், மேலும் ஸியாதா (என்பது) அள்ளாஹ்வை காண்பதாகும்.”**

முஃதஸிலாக்களும், நம்பிக்கைக் கோட்பாட்டில் முஃதஸிலாக்களான ஷீஆக்களும் அள்ளாஹ்வை காண்பதை நிராகரிக்கின்றனர், இது முதல் வசனத்தில் உறுதிப்படுத்தப்பட்டு இரண்டாவது வசனத்தில் அள்ளாஹ்வின் தூதர் (ﷺ) அவர்களால் விளக்கவும்பட்டுள்ளது. மேலும் தூதர் (ﷺ) அவர்களிடமிருந்து ஏராளமான ஹதீஸ்கள் இது விடயமாக உள்ளன. ஆகவே அவர்களுடைய (அதாவது முஃதஸிலா-க்களுடைய) குர்ஆனுக்கான தஃவீல் (உண்மையான கருத்தை திரிபுபடுத்தி விளக்குதல்) அள்ளாஹ்வின் தூதர் (ﷺ) அவர்களது ஆதாரபூர்வமான ஹதீஸ்களை நிராகரிப்பதற்கு அவர்களை இட்டுச் சென்றுள்ளது. எனவே அவர்கள் “நானும் எனது தோழர்களும் எதன் மீதிருந்தோமோ அதன் மீது” என்ற பாதுகாப்புப் பெற்ற பிரிவினர் எனக் கருதப்படக்கூடிய பகுதியிலிருந்து வெளியேறியுள்ளனர்.

அள்ளாஹ்வின் தூதர் (ﷺ) அவர்கள், விசுவாசிகள் அள்ளாஹ்வைக் காண்பர் என்பதை ஈமான் கொண்டு அதில் உறுதியான நம்பிக்கை வைத்திருந்தார்கள், ஏனெனில் இது ஸஹீஹான இரு தொகுப்புக்களிலும் அபூ ஸஈத் அல் ஃகுத்ரி, அனஸ் பின் மாலிக் (ﷺ) போன்ற பெரும் எண்ணிக்-கையிலான தோழர்களால் அறிவிக்கப்பட்டுள்ளது. அவ்வாறே ஸஹீஹ் தொகுப்புக்களுக்கு வெளியிலும் அபூ பக்ர் அஸ் ஸித்தீக் (ﷺ) மற்றும் ஏனையோர் தூதர் (ﷺ) அவர்கள் கூறியதாக அறிவிக்கின்றனர்: **“நிச்சயமாக முழு சந்திரனும் தோன்றக் கூடிய இரவில் சந்திரனைக் காண்பதற்கு எந்த பிரச்சினையும் எவ்வாறு இருக்காதோ அவ்வாறே நீங்கள் மறுமை நாளில் உங்களுடைய ரப்பை காண்பீர்கள்.”**

இதன் கருத்து யாதெனில் தெளிவான வானில் தோன்றக் கூடிய முழு நிலவைக் காண்பதில் எந்தப் பிரச்சினையும் எவ்வாறு இருக்காதோ அவ்வாறே (மறுமையில்) அள்ளாஹ்வைக் காண்பதிலும் எந்தப் பிரச்சி- னையும் இருக்காது. அவர்களோ தமது சுய சிந்தனையின் அடிப்படை- யில் இந்த ஹதீஸ்களை நிராகரிப்பதால் அவர்கள் பலயீனமான ஈமானைக் கொண்டுள்ளனர். இது கடந்த காலத்தில் தோன்றிய பிரிவு களது பிறழ்வுகளுக்கான ஒரு உதாரணமாகும், மேலும் ஃகவாரிஜ் போன்ற தற்கால பிரிவுகளும் இதில் நம்பிக்கைக் கொள்வதில்லை. இவர்களின் உறுப்பினர்களில் உள்ளோர் இபாழியாக்கள்[19] இவர்கள் தற்காலத்தில் மக்களை தமது வழிகேட்டின்பால் அழைப்பதில் சுறுசுறு- ப்பாய் இயங்குகின்றனர்.

அவர்களிடம் கட்டுரைகளும் ஆய்வுகளும் உள்ளன, அவற்றை விநியோ- கித்துப் பரப்புவதன் மூலம், ஃகவாரிஜ்கள் கடந்த காலங்களில் செய்த- தன் மூலம் அறியப்பட்ட, பல வழிகேடுகளை உயிர்ப்பிக்கின்றனர். அவற்றில் ஒன்று மறுமையில் சுவர்க்கத்தில் அள்ளாஹ்வை காண முடியும் என்பதை நிராகரிப்பதாகும்.

இப்போது நாம் உங்களுக்கு சமகால உதாரணமொன்றை முன் வைக்கின்றோம், அவர்களே காதியானிகள். பெரும்பாலும் நீங்கள் அவர்களைப்பற்றி கேள்விப்பட்டிருப்பீர்கள். இம் மக்களும் நாம் கூறுவது போல் "வணங்கப்படுவதற்கான உரிமை அள்ளாஹ்வையன்றி வேறு யாருக்கும் இல்லையென்றும், முஹம்மத் (ﷺ) அள்ளாஹ்வின் தூதர் என்றும் நான் சாட்சி கூறுகின்றேன்" என்கின்றனர்.

அவர்கள் தமது ஐங்காலத் தொழுகைகளை தொழுகின்றனர், அவர்கள் ஜும்மா தொழுகையையும் நிறைவேற்றுகின்றனர், அவர்கள் அள்ளாஹ்வி ன் புனித வீட்டை நோக்கி ஹஜ் மற்றும் உம்ரா செய்கின்றனர். அவர்களுக்- கும் எமக்கும் இடையே எந்த வேறுபாடும் இல்லை — அவர்களும் முஸ்லிம்கள் போலுள்ளனர். ஆயினும், அவர்கள் நபித்- துவம் முடிவுறவில்லை போன்ற (அகீதாவான) நம்பிக்கைக் கோட்- பாட்டில் பல விடயங்களில் நம்மோடு முரண்படுகின்றனர். முஹம்மத் (ﷺ) அவர்களுக்குப் பிறகு தூதர்கள் வருவர் என அவர்கள் நம்பிக்- கைக்கொள்கின்றனர், அவ்வாறேஅவ்வாறானஒருதூதர்இந்தியாவின்ஒரு ஊரான காதியனுக்கு வந்ததாகவும் அவர்கள் விசுவாசிக்கின்றனர். ஆக- வே அவர்களுக்கு வந்த இந்த தூதரை யார் நம்பவில்லையோ அவர்கள்

கா∴பிர்கள் (என அவர்கள் கூறுகின்றனர்.) (அல் குர்ஆனிய) வசனம் தெளிவாக இருக்கும் போது அவர்கள் எவ்வாறு இப்படிக் கூறமுடியும்?

**“உங்கள் ஆண் மக்களில் எவருக்கும் முஹம்மத் தந்தையல்ல, ஆனாலும் அவரோ அள்ளாஹ்வின் தூதராகவும் நபிமார்களின் முத்திரையாகவும் உள்ளார்.” (சூரா அஹ்ஸாப் : 40)**

“எனக்குப் பின் எந்த தூதரும் இல்லை” என்ற ஹதீஸ்கள் தவாதுர்[20] எனும் தரத்தை அடைந்திருக்க அவர்கள் எப்படி இவ்வாறு கூற முடியும். ஆகவே (மேலே கூறியுள்ளது போல் அவர்களால் கூற முடியாத நிலையில்) அவர்கள் அல் குர்ஆன் மற்றும் சுன்னாவுடைய கருத்தை மாற்றினர். அவர்கள் அல் குர்ஆனையும் சுன்னாவையும் ஸல∴புஸ் ஸாலிஹீன்கள் விளக்கியதுபோல் விளக்கவில்லை. ஆகவே இவ் விடயத்தில் (அதாவது அல் குர்ஆனையும் சுன்னாவையும் ஸல∴புஸ் ஸாலிஹீன்கள் விளக்காத விதத்தில் விளக்குகின்ற விடயத்தில்) தன்னை ஒரு நபி எனப் பிரகடனப்படுத்திக் கொண்ட வழி தவறிய வழிகேடனான மிர்ஸா குலாம் அஹ்மத் அல் காதியானி என்பவன் வரும்வரையில் முஸ்லிம்களும் எந்த முரண்பாடுமின்றி அவர்களை பின்பற்றினர். இவனுக்கு ஒரு நீண்ட கதையுண்டு, அது நமது இப்போதைய விஷயமல்ல.

ஆகவே முஸ்லிம்கள் வழி தவறாது காக்கப்படக்கூடிய இவ் உண்மைகளில் அறிவினைப் பெறாத, காதியானிகளாய் நபித்துவத்திற்கு உரிமை கோரிய இந்த தஜ்ஜாலோடு வழி தவறியயோரைப்போல் ஏராளமானோரை அவன் ஏமாற்றினான். “அவரோ அள்ளாஹ்வின் தூதராகவும் நபிமார்களின் (∴காத்தம்) முத்திரையாகவும் உள்ளார்” என்ற வசனத்திற்கு அவர்கள் என்ன கூறினர்? அவர்கள் கூறினர், இதற்கு அவருக்குப் பின் ஒரு தூதர் இல்லை என்ற கருத்தல்ல, மாறாக ∴காத்தம் என்ற சொல் நபிகளாரின் அணிகலனையே குறிக்கின்றது. ∴காத்தம் என்பது (முத்திரை அல்லது மோதிரம் என) விரலின் அணிகலனாகக் கருத்துக் கொள்ளப்படுவது போன்றே, முஹம்மத் (ﷺ) அவர்கள் நபிமார்களின் அணிகலனாக உள்ளார். ஆகவே இந்த ஆயத்தை அவர்கள் நிராகரிக்கவில்லை.

அள்ளாஹ் இவ்வசனத்தை முஹம்மத் (ﷺ) அவர்களுடைய உள்ளத்தில் இறக்கியருளவில்லை என அவர்கள் கூறவில்லை. (மாறாக) நிச்சயமாக அவர்கள் அதனுடைய உண்மையான கருத்தை நிராகரித்தார்கள்.

ஆகவே உண்மையான கருத்தில் ஈமான் கொள்ளாது வசனத்தில் மட்டும் ஈமான் கொள்வதால் என்ன நன்மையுண்டு. உங்களுக்கு இவ் உண்மையில் எந்த சந்தேகமும் இல்லையென்றிருந்தால், அப்போது அல் குர்ஆனினதும் மற்றும் சுன்னாவினதும் கருத்தை விளங்கும் வழியென்ன? நீங்கள் ஏற்கனவே (விளக்கப்பட்டதன் மூலம்) அவ் வழியை அறிந்து கொண்டீர்கள்.

அறபு மொழி பற்றிய நம்முடைய அறிவில் தங்கியிருப்பதோ, அல்லது நமது மனோ இச்சைகளின்படியோ அல்லது பாரம்பரியத்தின்படியோ, அல்லது நம்முடைய மத்ஹபுகளைக் கண்மூடிப் பின்பற்றுதலின் மூலமோ அல்லது நம்முடைய சூஃபித்துவ படிநிலைகளில் தங்கியோ அல் குர்ஆனையும் சுன்னாவையும் விளக்க முடியாது. ஆனாலும் (அதற்கான) ஒரே வழி – அது ஒரு பொதுவான கூற்றில் கூறப்படுவது போல்:

“அனைத்து நன்மைகளும் முன் வந்தோரை (அதாவது ஸலஃபுஸ் ஸாலிஹீன்களை) பின்பற்றுவதில் உள்ளது, அனைத்து தீமைகளும் பின்வந்தோரின் நூதனங்களில் உள்ளது.”, இத்தோடு நான் என்னுடைய உரையை நிறைவு செய்கின்றேன்.

இது **“நிச்சயமாக யாருக்கு உள்ளம் இருக்கின்றதோ அல்லது கவனத்தோடு யார் செவி சாய்ப்பாரோ அத்தகையவருக்கு இதில் படிப்பினை இருக்கின்றது” (அல் காஃப் : 37)** என்பதற்கேற்ப அமைந்தது என நாம் நம்புகின்றோம். ◯

**அடிக்குறிப்புக்கள்:**

[1] இலாஹ் என்பதன் கருத்து: வணங்கப்பட உரித்துடையோன் அள்ளாஹ்-வையன்றி வேறில்லை.

[2] இமாம் புஃகாரியின் அல் அதபுல் முஃப்ரத் (இல. 761), இமாம் பைஹகியின் ஷு உபுல் ஈமான் (4-228).

[3] ஸஹீஹ் அல் புஃகாரி (இல. 100), ஸஹீஹ் முஸ்லிம் (இல. 13).

[4] அதாவது இங்கு குறிப்பிடப்படுவது என்னவெனில், நமது நன்முன்னோரான ஸலஃபுஸ் ஸாலிஹீன்கள், இந்த சூஃபிகள் கூறுவதுபோல் இவ் ஹதீஸை விளங்கி, கூட்டம் கூட்டமாகக் கூடி – அள்ளாஹ், அள்ளாஹ் என ஸிக்ர் செய்யும் ஒரு முறையினை கைக்கொள்ளவில்லை.

[5] ஸு னன் அபீ தாவூத் (இல. 3641), ஸு னன் அத் திர்மிதி (இல. 2682).

[6] இதன் மொழிக் கருத்து, 'ஒப்பிடுதல்' என்பதாகும். இஸ்லாமிய அகீதாவில் அள்ளாஹ்வினுடைய பண்புகளை அவனுடைய படைப்புக்களோடு ஒப்பிடுவதாகும். இது நேரிய அகீதாவுக்கு முரணான போக்காகும். உதாரணமாக: அள்ளாஹ் கேட்கக் கூடியவனாக இருக்கின்றான். இக் கேட்கும் பண்பு படைப்புக்களுடையது போன்றதே என்பதாகக் கருதுவதே தஷ்பீஹ் அல்லது தம்ஸீல் என்பதாகும். அள்ளாஹ் தெளிவாகவே கூறுகின்றான்: "அவனைப் போல் எந்தவொன்றும் இல்லை, அவனே (அஸ் ஸமீஃ) அனைத்தையுமே கேட்போன், (அல் பஸீர்) அனைத்தையுமே பார்ப்போன்." (அஷ் ஷூ ரா 42:11)

[7] ஸஹீஹ் அல் புஃகாரி (5-190), ஸஹீஹ் முஸ்லிம் (இல. 2535) மற்றும் ஏனையோர்.

[8] ஸு னன் அபீ தாவூத் (4-198).

[9] அத் தபரானியின் முஃஜமுஸ் ஸஙீர் (இல. 724) மற்றும் மற்றொரு அறிவிப்-பாளர் தொடரோடு அத் திர்மிதி (இல. 2641), அல் ஹாகிம் (1-125).

[10] முஸ்னத் அஹ்மத் (4-126), இப்னு மாஜா (இல. 43), அல் ஹாகிம் (1-96) மற்றும் ஏனையோர்.

[11] ஸலஃபுஸ் ஸாலிஹீன் என்பதன் கருத்து நன் முன்னோர் என்பதாகும். அதாவது அல் குர்ஆனும், அஸ் சுன்னாவும் பரிந்துரைத்த நபிகளார் (ﷺ)

அவர்களும் அவர்களது தோழர்களுமே அம் முதல் சமூகம். பின் தாபிஈன்கள் எனப்படும் அவர்களைத் தொடர்ந்து வந்த சமூகம், அதன் பின் அவர்களைத் தொடர்ந்த தாபிஉத் தாபிஈன்களது சமூகம். சுருக்கமாக அவர்கள் ஸலஃப் (முன்னோர்) என்றும் கூறப்படுவர்.

[12] மன்ஹஜ் என்பதைத் தமிழில் 'முறைமை' என அர்த்தங்கொள்ள முடியும். அரபியில் மின்ஹாஜ் என்ற ஒத்த கருத்தும் உள்ளது. உயர்ந்தோனான அள்ளாஹ் கூறுகின்றான்: உங்களில் ஒவ்வொரு சமுதாயத்திற்கும் நாம் ஷரீஆவையும் மின்ஹாஜையும் (முறைமையையும்) ஏற்படுத்தியுள்ளோம்." (சூரா அல் மாஇதா 5:48) ஆகவே இங்கு இஸ்லாமிய நெறியினை எந்த முறையில் அணுகுவது, அதாவது அதன அணுகுமுறையே மன்ஹஜ், முறைமை என்பதனால் கருதப்படுகின்றது.

[13] இரண்டாவது இஸ்லாமிய நூற்றாண்டு முஃதஸிலாக்கள் எனும் ஒரு பிரிவினைக்கு முகம் கொடுத்தது. இதனுடைய மூல கர்த்தாவாக வாஸில் பின் அதா என்பவன் வரலாற்றில் இனங்காணப்படுகின்றான். இக் காலப்பகுதியில் தோன்றிய, இஸ்லாமிய வரலாற்றில் மகத்தான இடத்தைப் பெற்றுள்ள தாபிஈ இமாம் அல் ஹஸன் அல் பஸரி அவர்களுடைய மஜ்லிஸில் ஒரு கேள்வியெழுப்பப்பட்டது. அதாவது, ஒரு பெரும் பாவம் செய்த முஸ்லிமின் நிலையென்ன? என்பதே அக் கேள்வியாகும். அல் ஹஸன் அவர்களை முந்திக் கொண்டு (அவரது மாணவராக இருந்த) வாஸில் சொன்னான்: 'அத்தகையவர் விசுவாசியுமல்ல, நிராகரிப்பாளருமல்ல அத்தகையோர் இரண்டுக்கும் இடைப்பட்ட நிலையிலுள்ளோர்.' (அல் மன்ஸில் பைன மன்ஸிலதைன்). இத்தகைய அவனது தவறான முடிவின் காரணமாக இமாம் ஹஸன் அல் பஸரி அவனை தனது கல்வி வட்டத்திலிருந்து வெளியேற்றினார்கள். இதனால், வெளியேற்றப்பட்ட வாஸில் மஸ்ஜிதின் ஒரு மூலையிலிருந்துகொண்டு தனது சொந்த வகுப்புக்களை நடத்தத் தொடங்கினான். அல் ஹஸன் கூறினார்கள்:

"(லகத் இஃதஸலனா வாஸில்) வாஸில் நம்மிடமிருந்து விலகிக் கொண்டான்." அன்னாரின் இக் கூற்றே அவர்கள் முஃதஸிலா (விலகியோர்) என பெயர் பெற காரணமாய் இருந்தது.

முஃதஸிலாக்கள் கிரேக்க தத்துவத்தால் பெரிதும் கவரப்பட்டனர். அவர்களுடைய நாட்டம் தூய சுன்னா இல்லாமல் கிரேக்க தத்துவ ஞானமாக இருந்தது. ஆகவே இக்குழு தெளிவாகவே நன்கு நிலை நிறுத்தப்பட்ட அஹ்லுஸ் சுன்னாவின் அகீதாவிலிருந்தும் மன்ஹஜிலிருந்தும் விலகிக் கொண்டு, தனது மன்ஹஜாக சுய சிந்தனையை ஆக்கிக் கொண்டது. அஹ்லுஸ் சுன்னாவினுடைய அறிஞர்கள் இவர்களது இத்

தத்துவார்த்தப் போக்கை இல்முல் கலாம் என இனங்கண்டு மிகக் கடுமையாக விமர்சித்துள்ளனர்.

14 ஃகவாரிஜ்கள் (கலகக்காரர்) பற்றி ஏராளமான நம்பகமான ஹதீஸ்கள் பதிவாகியுள்ளன. இவர்களை ''நரகத்தின் நாய்கள்'' என ரசூல் (ﷺ) அவர்கள் சித்தரித்தார்கள். (அஹ்மத், அல் ஹாகிம், இப்னு மாஜா), முஸ்லிம் ஆட்சியாளர்களுக்கு எதிராக கலகம் செய்தல், அவர்களுடைய தவறுகள் காரணமாக அவர்களை காஃபிர் எனப் பிரகடணப்படுத்தல், இம் முஸ்லிம் ஆட்சியாளர்களோடு ஒத்துழைக்கின்ற முஸ்லிம்களையும் காஃபிர் என்பதாக பிரகடணம் செய்து அவர்களை கொலை செய்தல், சத்தியத்தை தமது பொய்யான வாதங்களை நிறுவுவதற்காக பயன்படுத்துதல் என்பன இவர்களது வழிகெட்ட நம்பிக்கைக் கோட்பாடும் போக்குகளுமாகும்.

ஆரம்பமாக இவர்களின் பிதா துல் ஃகுவைசரா அள்ளாஹ்வின் தூதருக்கு எதிராகவே கலகத்தைத் தோற்றுவித்தான். ஒரு முறை ரசூல் (ﷺ) அவர்கள் தங்கத்தை குறிப்பிட்ட சிலருக்கு மத்தியில் பகிர்ந்தளித்த போது இவன் எழுந்து, 'அள்ளாஹ்வின் தூதரே நீதமாக நடந்து கொள்ளுங்கள்' என்றான். ரசூல் (ﷺ) அவர்கள் அவனிடம் கேட்டார்கள்: ''உனக்கு நாசமுண்டாகட்டும்! நான் நீதமாக நடக்கவில்லையாயின் யார் நீதமாக இருப்பார். நான் நீதமாக இல்லையேல் நீர் அழிந்து நாசமாகி இருப்பீர்'' (ஸஹீஹ் அல் புஃகாரி, முஸ்லிம்), மேலும் இவர்கள், ''படைப்பினங்களில் மிகக் கெட்டவர்கள்.'' என்றும் ரசூல் (ﷺ) அவர்கள் கூறினார்கள் (ஸஹீஹ் முஸ்லிம்).

15 ஷீஆக்களின் பிரிவுகளில் ஒன்று. இப் பிரிவு ஷீஆக்களது பிரதான பிரிவான இஸ்னா அஷ்அரிய்யா (எனும் பன்னிரண்டு இமாம்களை நம்பிக்கைக் கொள்ளும்) பிரிவிலிருந்து இத் தொடரின் ஐந்தாவது இமாம் தொடர்பாக கருத்து வேற்றுமை கொண்டு பிரிந்தது. ஸைதியாக்களின் படி இந்த ஐந்தாவது இமாம் ஸைத் பின் அலீ பின் அல் ஹுஸைன் பின் அலி பின் அபீ தாலிபே என நம்புகின்றனர். இதனால் தான் இவர்கள் ஸைதிய்யா எனும் பெயரைப் பெறுகின்றனர். ஆனாலும் உண்மையில் ஸைத் பின் அலீ (மரணம் ஹி. 740) அஹ்லுஸ் சுன்னாவில் உள்ளவரேயன்றி இவர்களையோ, மற்றும் ஏனைய ஷீஆக்களையோ சார்ந்தவரல்ல.

16 ஷீஆவின் மூல கர்த்தா அப்துள்ளாஹ் இப்னு ஸபா எனும் யமன் நாட்டி-லிருந்து வந்த யூதனாவான்.

17 ஷீஆக்களின் பிரிவுகளில் ஒன்று. ராஃபிழா என்பதன் கருத்து மறுத்தோர் என்பதாகும். உமைய்யா ஃகலீஃபாவான ஹிஷாமுடைய படைகள் ஸைத்

பின் அலீ பின் அல் ஹு ஸைன் பின் அலி அவர்களுக்கு எதிராக வரும் போது அவருக்கு உதவுவதாக வாக்களித்து, பிறகு அபூ பக்ர் மற்றும் உமர் (ﷺ) ஆகியோர் பற்றிய ஸைதின் சார்பான நிலைப்பாட்டை அறிந்து இவர்கள் அவருக்கு உதவ மறுத்து அவர்களை தனிமைப்படுத்தினர். இப் பிரிவே ஷீஆக்கள் மத்தியில் பெரும் பிரிவாக உள்ளது. பொதுவாக ஷீஆ எனும் பதம் பிரயோகிக்கப்படும் போது இந்த ஷீஇ ரா∴பிழாக்களே குறிப்பிடப்படுகின்றனர். அலி பின் அபீ தாலிப் (ﷺ) அவர்கள் மீது கொண்ட எல்லை மீறிய நம்பிக்கை அவர்களது கோட்பாட்டின் அடிப்படையாகும். இப் பிரிவு இமாமிய்யா மற்றும் இஸ்னா அஷ்அரிய்யா என்ற பெயர்கள் கொண்டும் அழைக்கப்படுகின்றது.

[18] ஸல∴புஸ் ஸாலிஹீன்களான ஸஹாபாக்கள், தாபிஈன்கள், தாபிஉத் தாபிஈன்கள் ஆகியோரது வழிமுறையை கடை பிடிப்பவரே ஸல∴பி என அடையாளப்படுத்தப்படுவார். மாறாக இம் முறைமையை ஏற்காத, இவ் வழிமுறைக்குப் புறம்பான சிந்தனா போக்குகளையும், வழிமுறைகளையும் கடைபிடிப்பவர் இப் பெயரைத் தாங்கிக் கொண்டாலும் அவர் உண்மையான அர்த்தத்தில் ஸல∴பியாக மாட்டார். மாறாக, அவர் அதன் எதிர்ப்பதமான ∴கல∴பியாவார். (அதாவது பின் வந்தவர்களது நூதனமான வழி முறையினை கடைபிடிப்பவர்.)

[19]இபாழியா என்பது ∴கவாரிஜ்களில் இருந்து கிளைத்த ஒரு துணைப் பிரிவாகும் என்பதாக இப்னு ஹஸ்ம் அவர்கள் தனது அல் ∴பிஸால் (3/124) என்ற நூலில் குறிப்பிடுகின்றார்கள். கி.வ. 7ம் நூற்றாண்டில் வாழ்ந்த அப்துள்ளாஹ் இப்னு இபாழ் என்பவனே இதன் தோற்றுவாயாக அடையாளங் காணப்படுகின்றான். இப் பிரிவு ∴கவாரிஜ்களின் மென்மையான போக்குடையதாகக் கருதப்படினும், இதன் வழிகேடான நம்பிக்கைக் கோட்பாடு மிகப் பயங்கரமானது.

- இமாம் அல் அல்பானி அவர்கள் இங்கு குறிப்பிடுவது போல் மு∴மின்கள் மறுமையில் அள்ளாஹ்வை காண்பார்கள் என்பதை இவர்கள் புறக்கணிக்கின்றனர்.
- ஈமான் கூடிக் குறையக் கூடியது என்ற நேரிய அகீதாவுக்கு முரண்பாடுடையவர்கள். ஈமான் ஒன்றோ முழுமையாக இருக்கும், அல்லது இல்லாது இருக்கும்; இவை இரண்டுக்கும் இடைப்பட்ட நிலையிலில்லை என்பது இவர்களது வாதம்.

- உஸ்மான் (ﷺ) அவர்களது ஆட்சி தொடர்பான கண்டனப் போக்கு, முஆவியா (ﷺ) அவர்களை கடுமையாக விமர்சித்தல், அலீ பின் அபீ தாலிப் (ﷺ) அவர்களது முஆவியாவுடனான சமரசப் பேச்சு வார்த்தையை வெறுத்தலும் அதனை பெரும் பாவம் என்பதாக கருதுதலும், நஹ்ரவானில் தமது பிரிவினரான ஃகவாரிஜ்களைக் கொன்றமை பற்றி அலீ (ﷺ) அவர்களை கண்டித்தல் போன்றன ஸஹாபாக்கள் தொடர்பான இவர்களது மோசமான நிலைப்பாடாகும்.

இதுவே இவர்களது நம்பிக்கைக் கோட்பாடு பற்றிய சுருக்கமாகும். பிரிட்டிஷ் ஆக்கிரமிப்பாளர்கள் ஓமான் நாட்டை விட்டு வெளியேறிய போது அதன் ஆட்சிப் பொறுப்பை இவர்களிடமே கையளித்தது. ஆகவே இன்று ஓமான் என்பது இபாழிகளின் உத்தியோகபூர்வ அரசாக விளங்குகின்றது. இந் நாட்டில் இபாழிகளே பெரும்பான்மையினர்கள். இவ்வாறே கிழக்கு ஆபிரிக்காவில் ஸென்ஸிபார் போன்ற பகுதிகளிலும், லிபியாவில் ஜபல் நஃபூஸா மற்றும் சுவாரா போன்ற பகுதிகளிலும், தியூனிஸியாவின் ஜெர்பா தீவுகளிலும், அல்ஜீரியாவின் ஒரு பகுதியிலும் இவ் இபாழிகள் வாழ்ந்து வருகின்றனர்.

[20] ஹதீஸ் கலையில் தவாதுர் (அல்லது முதவாதிர்) எனப்படுவது, அறிவிப்பாளர் பட்டியலில் ஒவ்வொரு கட்டத்திலும் ஏராளமான அறிவிப்பாளர்களால் அறிவிக்கப்பட்ட ஹதீஸாகும். அதனால் அனைவருமே அக் குறிப்பிட்ட ஹதீஸை இட்டுக்கட்ட ஒன்றுபட்டிருப்பர் என்பதாக நினைத்துக் கூடப் பார்க்கப்பட முடியாது.

ஹிஜ்ரீ 1332 (கி. வ. 1914) இல் அல்பேனியாவின் அப்போதைய தலைநகரான அஷ்கொதராவில் ஒரு வறிய எனினும் இஸ்லாமியப் பற்றில் செழித்த குடும்பத்தில் பிறந்தவர் அபூ அப்திர் ரஹ்மான் முஹம்மத் நாஸிருத்தீன் பின் நூஹ் நஜ்ஜாதி அல் அல்பானி. ஆனாலும் ஸிரியாவின் தலைநகர் டமஸ்கஸிலேயே வளர்ந்தார்கள்.

சிறு வயது முதலே இமாம் அவர்கள் ஹதீஸ் துறையில் நாட்டமுடையவராய் திகழ்ந்தார்கள். இமாம் அவர்கள் இருபதே வயதாக இருந்த போது, ரஙீப் அத் தப்பாஃக் என்ற ஸிரிய நாட்டு ஹதீஸ் கலா வல்லுனரிடமிருந்து இஜாஸா (எனும் அனுமதி) பெற்றார்கள். ஹதீஸ் துறைசார் தனது ஆக்கத்தினையும் இதே காலப்பிரிவிலேயே வெளிக் கொணர்ந்தார்கள்.

தீவிர இஸ்லாமிய ஆய்வு சோம்பிய நிலை, பலயீனமான அர்ப்பணிப்புக்களைக் கொண்ட ஒரு யுகத்தில், அள்ளாஹ்வின் மகத்தான அருட் கடாட்சம், முன் சென்ற இமாம்களின் ஆய்வுகளையும் பணிகளையும் இந் நூற்றாண்டில் மீட்டுவதற்கும், அவைகளில் புரட்சிகரமான சாதனைகளை புரிந்திடவும் இமாம் அவர்களுக்கு அவன் அருள் புரிந்தான்.

ரசூலுள்ளாஹி (ﷺ) அவர்களது சுன்னாவினை நிலைநாட்டுவதில் தீவிர ஈடுபாடு காட்டிய இமாம் அவர்கள் அதனை ஊர்ஜிதப்படுத்துவதில் மிகத்தீவிர கவனம் செலுத்தியதோடு அதற்காக பகீரதப்பிரயத்தனங்களையும் மேற்கொண்டார்கள். அதனால் பல பிரபலமான ஹதீஸ் கிரந்தங்களில் பதிவாகியுள்ள ஆதாரபூர்வமான ஹதீஸ்களையும் பலயீனமானவற்றையும் தனது பரிசீலனையின் மூலம் வேறு பிரித்தார்கள். அதன் பயனாக குதுபுஸ் ஸித்தா வரிசையில், சுனன் அபீ தாவூத், சுனன் அத் திர்மிதி, சுனன் இப்னி மாஜா, சுனன் நஸயி போன்றவையும் மற்றும் இமாம் அத் தபரிஸியின் மிஷ்காதுல் மஸாபிஹ், இமாம் அந் நவவியின் ரியாலுஸ் ஸாலிஹீன், இமாம் முன்திரியின் ஸஹீஹ் அத் தர்கீப் அத் தர்ஹீப், இமாம் சுயூதியின் ஜாமிஉஸ் ஸஙீர் உட்பட இன்னும் பல கிரந்தங்களில் மேற்கோள் காட்டப்பட்டுள்ள ஹதீஸ்களினுடைய தரங்கள் ஸஹீஹ், ழஈஃப் என வெளியாகியுள்ளன.

அவ்வாறே ஸஹீஹான ஹதீஸ்களை தனியே இனங்கண்டு தொகுத்தளித்த ஸில்ஸிலதுல் அஹாதீஸிஸ் ஸஹீஹா, ழஈஃபான மற்றும் இட்டுக்கட்டப்பட்ட யஹதீஸ்களை தனியே இனங்கண்டு தொகுத்தளித்த ஸில்ஸிலதுல் ஆஹாதீஸில் ழஈஃபா வல் மவ்ழூஆ போன்றன அவரது மிக முக்கியமான பணிகளில் சிலவாகும்.

தன்னுடைய வாழ்க்கையில் எண்ணற்ற ஹதீஸ்களின் முப்பதாயிரம் தனித்தனி அறிவிப்பாளர் பட்டியல்களுக்கும் மேல் ஆய்வுசெய்தும் குறிப்புக்கள் இட்டும் உள்ளார்கள். அறை நூற்றாண்டுகளுக்கு மேல் சுன்னாவின் நூல்களோடு திளைத்தும், புலமையுள்ள அதன் சான்றோருடன் இணைந்தும் தொடர்பு கொண்டும் உள்ளார்கள்.

பல்வேறு அறிஞர்கள் இமாமவர்களது ஹதீஸ் கலா புலமையில் அலாதியான நம்பிக்கை வைத்திருந்தனர். ஹதீஸ் துறைசார் தமது ஆக்கங்களை வெளியிடுவதற்கு முன்பாக அதனை மீளாய்வுக்காக இமாமவர்களிடம் கொடுப்பர்.

1955லேயே அவரது ஹதீஸ்கலா புலமையை அடையாளம் கண்ட டமஸ்கஸ் பல்கலைக் கழக ஷரீஆ பீடம், கொடுக்கல் வாங்கல் மற்றும் வர்த்தக விவகாரங்கள் தொடர்பான ஹதீஸ்களை பகுப்பாய்வு செய்யும் பணியை இமாம் அல் அல்பானியிடம் ஒப்படைத்தது.

இப்னு ஃகுஸைமாவுடைய ஹதீஸ்களை பகுப்பாய்வுக்குட்படுத்திய இந்திய அறிஞர் முஸ்தஃபா அல் அஃழமி (ஹதீஸ் கலைத் துறை தலைவர்- மக்கா), அதனை மீளாய்வுக்குட்படுத்தி உறுதிப்படுத்திக் கொள்ளும் பொருட்டு இமாம் அல் அல்பானியிடம் ஒப்படைத்தார்கள். நான்கு பாகங்களில் வெளியாகியுள்ள இப்னு ஃகுஸைமாவின் பதிப்பில் இமாம் அல் அல்பானி அவர்களது குறிப்பையும் காணலாம்.

இவ்வாறே மிகப் பிரபல்யமான மிஷ்காதுடைய தமது வெளியீட்டுக்காக அதன் ஒவ்வொரு ஹதீஸையும் தராதரப்படுத்துவதற்கும், ஆதாரங்களை உறுதிப்படுத்துவதற்கும் மற்றும் குறைபாடுகளை நீக்கி தேவையான குறிப்புக்களை பதியுமாறும் இமாமவர்களையே மக்தப் அல் இஸ்லாமி எனும் வெளியீட்டகம் வேண்டிக் கொண்டது.

இமாமவர்கள் வெறுமனே ஒரு முஹத்திஸ் (ஹதீஸ் கலா வல்லுனர்) அன்றி அவரொரு ஃபகீஹ் (சட்டவியலாளர்) அல்ல என்ற ஒரு துர்க்கருத்து அறிவியல் குறும் பார்வையுடையோரிடம் நிலவுவதுண்டு. அதனை அத்தகையோர் மிக ஆர்வமாக பரப்புவதுமுண்டு.

அத்தகைய குறை மதியாளர்கள் இமாம் அவர்களது ஃபிக்ஹ் அறிவையும் அணுகு முறையினையும், அள்ளாஹ்வின் தூதர் (ﷺ) அவர்களின் தொழுகை முறையை தக்பீர் முதல் தஸ்லீம் வரை ஆதாரபூர்வமாக வர்ணிக்கும் ஸிஃபதுஸ் ஸலாத், தராவீஹ் பற்றிய சுன்னாவின் நிலைப்பாட்டை தெளிவாக்கும் ஸலாதுத் தராவீஹ், ஜனாஸா பற்றிய சட்ட திட்டங்கள் மற்றும் சுன்னாவுக்கு முரணான போக்குகளை தெளிவாக்கும் அஹ்காமுல் ஜனாயிஸ் வ பிதுஉஹா, நிகாஹ் பற்றிய சட்டங்களை தெளிவுபடுத்தும் ஆதாபுஸ் சுஃபாஃப் என்பன போன்ற அவரது ஃபிக்ஹ் தொடர்பான ஆக்கங்களில் காணலாம்.

இந் நூற்றாண்டின் மற்றொரு அறிஞராகக் கருதப்படுகின்ற இமாம் அப்துல் அஸீஸ் பின் பாஸ் அவர்கள், 'இந்த வானத்திற்குக் கீழ் வாழ்ந்து கொண்டிருப்பவர்களுள் ஹதீஸ் துறையில் அல் அல்பானி-யைவிட ஞானமுள்ள ஒருவரை நான் அறியவில்லை' எனக் கூறியுள்ளார்கள்.

அள்ளாஹ்வின் தூதர் (ﷺ) அவர்கள் கூறினார்கள்: "நிச்சயமாக அள்ளாஹ் இந்த உம்மத்திற்கு ஒவ்வொரு நூற்றாண்டின் ஆரம்பத்திலும் அவர்களுடைய மார்க்கத்தை சீராக்கக்கூடிய ஒருவரை அனுப்புவான்." (சுனன் அபீ தாவூத், இல:3291) இந்த ஹதீஸின்படி இத் தலைமுறையின் சீர்திருத்தவாதி யார்? என ஸவூதி அரேபியாவின் முன்னாள் முஃப்தியும் இந்த உம்மத்தில் தோன்றிய மகத்தான இமாம்களுள் ஒருவருமான அப்துல் அஸீஸ் பின் அப்திள்ளாஹ் பின் பாஸ் அவர்கள் கேட்கப்பட்டார்கள். அவர்கள் கூறினார்கள்: 'எனது கருத்தின்படி இக் காலத்தினுடைய சீர்திருத்வாதி அஷ்ஷேஃக் முஹம்மத் நாஸிருத்தீன் அல் அல்பானி ஆவார்கள், அள்ளாஹ்வே மிக

அறிந்தவன்.' (ஜோர்டானிலிருந்து வெளியாகும் 'அல் அஸாலா' சஞ்சிகை எண்: 23, 15 ஷஃபான் 1420 ஹி. பக்கம் 76).

அவர் வகித்த பதவிகள் வருமாறு: ஸிரிய ஹதீஸ் கமிட்டி உறுப்பி-னராக நியமிக்கப்பட்டார். மதீனா இஸ்லாமிய பல்கலைக் கழகத்தின் ஹதீஸ் கலை விரிவுரையாளராக நியமனம் பெறல். (இஸ்லாமிய பல்கலைக் கழகங்களின் வரலாற்றில் முதல் தடவையாக இங்கு இஸ்னாத் பற்றிய கலைகளையும் போதித்தார்கள்.)

ஸவூதி அரேபிய கல்வி அமைச்சு மக்கா பல்கலைக் கழக உயர் கல்வியினை மேற்பார்வை செய்யுமாறு வேண்டிக் கொண்டது.

மறைந்த மன்னர் ஃகாலித் பின் அப்தில் அஸீஸ் இமாமவர்களை மதீனா இஸ்லாமியப் பல்கலைக் கழக மேற்சபை உறுப்பினராக (ஹி. 1395-1398) நியமித்தார்.

இஸ்லாமிய அறிவியலுக்கு அவர் அளித்துள்ள மாணவர்கள் ஏராளம். அவர்களில் பலர் சம கால இஸ்லாமிய வரலாற்றில் முக்கிய இடம் வகிப்பவர்களாயும் உள்ளனர். இமாமவர்களது வகுப்புக்களுக்கு மாணாக்கர் மட்டுமன்றி பல்கலைக்கழக விரிவுரையாளர்களும் வந்தமர்ந்து பயனடைய பின்வாங்கவில்லை.

நிச்சயமாக அவர் பற்றிய நேசம் அகிலத்தாரின் உள்ளங்களில் நிலைபெற்றுள்ளது; மார்க்கக் கலைகளில் அவருடைய தலைமை-த்துவம் அவரது ஷரீஆ பற்றிய அறிவின் உறுதிப்பாட்டாலும், சக்தி-யாலும் உறுதியாக நிலைநாட்டப்பட்டுள்ளது. அவரது நூல்களை பதி-ப்பிக்க எந்த நிதியமும் இருக்கவில்லை. அவரது செலவினங்களை செலுத்துவதற்காக எந்த கமிட்டியும் இருக்கவில்லை. அவருடைய வதிவிட விசாவுக்காக அனுசரனை வழங்க எந்தவொரு இயக்கமும் இருக்கவில்லை, மேலும் அவரது முயற்சிகளை பரவச்செய்ய எந்த கட்சியும் இருக்கவில்லை. எந்தவொரு ஊடகமும் அவரது கட்டுரை-களை வெளியிடவோ, அவரது படத்தை காட்டவோ இருக்கவில்லை.

இவற்றுக்கப்பால், அறிவில் அவரது வலிமை அவரது அடையாள-மாகும். ஆகவே அவரது அறிவாலும் விளக்கத்தாலும் எந்தவொரு

இயக்கமோ தலைவரோ இன்றி, மேலும் அள்ளாஹ்வின் தவ்ஃபீக்கைத் தவிர (வேறு) எந்தவொரு உதவியுமின்றி தேசங்களையும் மக்களையும் அவரால் எதிர்கொள்ள முடிந்தது. ஆதலால் அவரது அறிவே அனைத்துத் துறைகளிலும் அவரது தலைமைத்துவத்தை அவசியப்படுத்தியது.'' என குவைத் நாட்டைச் சேர்ந்த மூத்த தாலிபுல் இல்ம் (அறிவு மாணவர்) அஷ்ஷேஃக் அபூ உஸ்மான் முஹம்மத் அல் அன்ஜரி அவர்கள் சமீபத்தில் தனது உரையொன்றில் குறிப்பிட்டது ஈண்டு நோக்கத்தக்கது.

இமாம் அல் அல்பானி அவர்கள் ஹி. 1420ல் ஜமாதுல் ஆஃகிர் மாதத்தில் எட்டு தினங்களே எஞ்சியிருக்க மஃரிபுக்கு சொற்ப நேரத்திற்கு பிறகு (கி.வ. 1999ம் ஆண்டு ஒக்டோபர் 2) சனிக்கிழமை, ஜொர்தான் தலைநகர் அம்மானில் மரணமெய்தினார்கள்.

இமாமவர்களது ஆய்வுக் குறிப்புக்களால் நிறம்பி வழியும் அவர் கரம் தவழ்ந்த ஒவ்வொரு நூலும் இஸ்லாமிய அறிவியலுக்கு விலைமதிப்பற்ற செல்வமாகும். தனது மரணத்திற்குப் பின் அவற்றை மதீனா சர்வதேச இஸ்லாமிய பல்கலைக் கழகத்திற்கு அளிக்கும் அவரது வஸிய்யாவின் படி, 120 கார்டூன்களுக்கு மேற்பட்ட நூலகம் மதீனாவை அடைந்து அதற்காக பிரத்தியேக பகுதியொன்றும் ஒதுக்கப்பட்டுள்ளது.

அவ்வாறே அவரால் நிறைவாக்க முடியாதுபோன மற்றும் நிறைவுற்று கையெழுத்துப் பிரதிகளாக உள்ள ஆய்வுப் பணிகள் ஏராளமாக உள்ளதாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது. உயர்ந்தோனான அள்ளாஹ் இமாமவர்களுக்கு மறுமையின் நற்பேறை வழங்குவானாக!